KALKI 29.7.90 ரூ. 2.50

# கல்கி




**ஐஸ்க்ரீம்: ரூ.400 கோடி வியாபாரம்!**

** உயர் மட்டக் குழுவில் உங்களைப் போடாததால் நீங்கள் தமிழகம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்து, ஜெயலலிதாவுக்கு எதிராக ஆட்களைத் திரட்டியதால்தான் கட்சியை விட்டு நீக்கப்பட்டீர்கள் என்று சொல்லப்படுகிறதே?

பதில்: என்னைப் போடாதது ஒன்றும் பெரிய விஷயமல்ல. அ. தி. மு. க. ஜானகி அணி – ஜெயலலிதா அணி என்று பிரிந்த போது ஜெயலலிதாவை ஆதரித்த எட்டு மாவட்டச் செயலாளர்களை உயர் மட்டக் குழுவில் சேர்க்கவில்லை. அதுதான் போகட்டும் என்றால், மாவட்டச் செயலாளர் ஒருவர் இருந்தால் அவரைப் போடாமல் இணைச் செயலாளரைப் போடுவது என்ன நியாயம்? மேலும் இவ்விருவருமின்றிக் கட்சியில் தீவிரமாகச் செயல்படாத மூன்றாவது ஆளைப் போடுவதை எப்படி ஏற்பது? இப்படிச் செயல்பட்டிருக்கிறார் ஜெயலலிதா. இந்தப் போக்கு கட்சித் தொண்டர்களையும் கட்சியையும் பலவீனமடையச் செய்யும். இதைத்தான் நாங்கள் எடுத்துக்காட்டினோம். நாங்கள் என்ன, கட்சிக்கு எதிராகப் பேசினோமா? தலைமைக்கு எதிராகப் பேசினோமா? ஒவ்வொரு பொதுக்கூட்டத்திலும், புரட்சித் தலைவரின் புகழ்பாடியதுமட்டுமில்லாமல், ஜெயலலிதாவையும் புகழ்ந்து பேசி அடுத்த முதல்வர் அவர்தான் என்றெல்லாம் சொல்லி வந்திருக்கிறோமே! எடுத்தேன், கவிழ்த்தேன் என்று செயல்பட்டிருக்கிறார். மூத்த தலைவர்களைக் கொஞ்சம் கூட லட்சியம் செய்யாமல் தன்னிச்சையாக முடிவு எடுத்திருக்கிறார். புரட்சித் தலைவர் யாரையும் கட்சியை விட்டுச் செல்லச் சுலபத்தில் அனுமதிக்க மாட்டார். ஆனால் ஜெயலலிதாவின் போக்கு நேர் எதிரானது. கட்சி சட்டதிட்டப்படி என்னிடம் விளக்கம் கேட்டுவிட்டுத்தான் நடவடிக்கை எடுக்க வேண்டும். ஆனால் எந்தவித வாய்ப்பும் தராமல் பழிவாங்கிவிட்டார்.

** ஆரம்பத்திலிருந்தே உங்களுக்கும் அவருக்கும் சரிப்பட்டு வரவில்லை. அவ்வாறிருக்க 'புரட்சித்

# "ஜெயலலிதாவால்தான் வோட்டுக்களைப் பெற முடியும் என்பது தவறான கருத்து...!"







ராமராஜன்

கட்சியிலிருந்து வெளியேற்றப் பட்ட ராமராஜன் ஓர் அறிக்கையில், ''ஜெயலலிதா, என்றைக்குமே ராமராஜ னின் வளர்ச்சியில் அக்கறை கொண் டவர்; ஒரு மகனின் வளர்ச்சியில் அக்கறை கொண்ட தாயின் கண்டிப்பில், கடுமை இருக்கலாம்; ஆனால் நோக்கத் தில் தவறு இருக்க வாய்ப்பு இல்லை'' என்று கூறியதோடு, ''புரட்சித் தலைவி தலைமையில், புரட்சித் தலைவர் ஆட்சி அமைய வேண்டும் என்பதே என் லட்சி யம். அந்த லட்சியம் நிறைவேறத் தொடர்ந்து பாடுபடுவேன்'' என்றும் சொல்லியிருக்கிறார்.

''உங்களைத்தான் கட்சியிலிருந்தே நீக்கிவிட்டார்களே! அப்புறம் நீங்கள் கட்சிக்காக எப்படிப் பாடுபடுவீர்கள்?'' என்று ராமராஜனை நாம் கேட்டபோது, ''கட்சியில் இல்லாததால், அ. தி. மு. க. மேடைகளில் பேச முடியாது, அவ்வளவு தானே! நான் என் படங்கள் மூலம் பிரசாரம் செய்வேன். இதற்குமேல் ஒன்றும் கேட்காதீர்கள்'' என்றார்!

— நிருபர்

---

தலைவரின் உண்மையான வாரிசு புரட்சிச் செல்வி ஜெயலலிதா' என் றெல்லாம் எப்படி மேடை ஏறிப் பேசி வந்தீர்கள்?

பதில்: இவருடைய போக்குப் பிடிக்காமல் நாங்களே விலகி வந்திருக்க வேண்டும். ஆனால் கட்சியின் ஒட்டுமொத்த நலனைக் கருதிப் பல அவமானங்களைத் தாங்கிக் கொண்டு, 'புரட்சித் தலைவரின் வாரிசு, புரட்சித் தலைவி' என்று மேடையில் பேசி வந்தோம். திருந்துவார், திருந்துவார் என்று பொறுத்துப் பொறுத்துப் பார்த்தோம். திருந்தாதது மட்டுமல்ல; கட்சி நல்லபடியாக வளர வேண்டும் என்று நினைப்பவர்க ளையே பழிவாங்க ஆரம்பித்து விட்டார். தேர்தலுக்குத் தேர்தல் வந்து குதித்து விட்டால் மக்கள் வோட்டுப் போட்டு விடு வார்கள் என்று நினைத்து மற்ற சமயங்களில் முடங்கிக் கிடக்கிறார். கட்சியில் என்ன நடக் கிறது என்பது நடராஜன் சொல்லித்தான் அவருக்குத் தெரிகிறது. கடந்த ஒன்றரை வருடமாக, வாரம் ஒரு முறை நான் தொலை பேசியில் பேச முயன்றும் முடியவில்லை. என்னைப் போன்ற தலைவர்களுக்கே இந்த நிலை என்றால் தொண்டர்களின் நிலை பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. கட்சியில் வேறு யாரும் புகழ் பெற்று விடக் கூடாது. கைதட்டல் வாங்கிவிடக் கூடாது என்பதில் மிகவும் குறியாக இருப்பவர் அவர். எம். ஜி. ஆரின் அண்ணன் மகன் பிரபாகரன் ஜெயலலிதாவுடன் ஒரு முறை பிர சாரத்துக்குச் சென்றார். ''இவர் எம். ஜி. ஆரின் அண்ணன் மகன்'' என்று அறிமுகப்படுத்தியதும் பலத்த கைதட்டல். ஜெ முகம் வாடிப் போயிற்று. அதிலிருந்து பிரபாகரனையோ அல்லது வேறு எந்தத் தலைவரையோ அவர் பிரசாரம் செய்யும் வேனிலே ஏற்றிக் கொள்ள மாட்டார். இப் போது ராமராஜனை வெளியேற்றியதற்கும் பொறாமைதான் காரணம். அ. தி. மு. க. தலைவர்தானே இவர்? இவர் வீட்டில் எம். ஜி. ஆர். படமே கிடையாது! புரட்சித் தலைவர் மறைந்து ஒன்றரை வருடம் ஆகியும் கட்சி சார்பில் அவருக்கு ஒரு சிலை கூட வைக்க அவர் முயற்சி செய்யவில்லை.

** தனிக்கட்சி ஆரம்பிப்பீர்களா? அல் லது ஜெ. யுடன் இணைவதற்கு வாய்ப்பு இருக்கிறதா?

பதில்: நாங்கள் ஏன் தனிக்கட்சி துவங்க வேண்டும்? நாங்கள்தான் உண்மையான அ. தி. மு. க.! பல மூத்த தலைவர்கள் எங்க ளுக்கு ஆதரவு கொடுத்திருக்கிறார்கள். ஜெயலலிதாவைத் தவிர்த்துவிட்டு, கட்சி யில் உள்ள எல்லோரையும் ஓரணியில் திரட்ட இருக்கிறோம். ஜெ.யுடன் மீண்டும் இணைவது என்ற பேச்சுக்கே இடமில்லை. எங்களை எட்டி உதைத்த கால்களை முத்தமிட நாங்கள் என்ன மானம், ரோஷம் இல்லாதவர்களா?

** முன்பு ஒருமுறை நீங்கள் பண்ருட்டி, நெடுஞ்செழியன், அரங்கநாயகம் போன்றவர்களுடன் பிரிந்து சென்ற போது, 'தூக்கில் தொங்கினாலும் தொங்குவேன். மீண்டும் ஜெயலலிதா வுடன் சேர மாட்டேன், என்று சொன் னீர்களே? என்ன நடந்தது?

பதில்: நீங்கள் சொல்வது போல் நான் ஒரு போதும் பேசவில்லை. பத்திரிகைகள் திரித்து வெளியிட்டு விட்டன. மேலும் மீண் டும் நான் ஜெ.யுடன் இணைந்தது அவரே கூப்பிட்டுத்தான் நடந்தது. பொதுத் தேர்தல் வரவிருந்த சமயம் அது. சேலத்துக்கு டூர் சென்றிருந்த அவர் அதைப் பாதியில் ரத்து செய்துவிட்டு, சென்னைக்கு வந்து என்னை அழைத்துப் பேசினார்: ''தயவு செய்து மீண் டும் வந்து கட்சியில் சேருங்கள். நடந்தவை களுக்கு நான் வருத்தப்படுகிறேன்'', என்று சொன்னார். அதன் பின்னர்தான் நான் இணைந்தேன். ஆனால் அவர் வேஷம் போட்டு நடித்திருக்கிறார் என்பது பின்

னால்தான் புரிந்தது. பக்கத்துத் தொகுதிகளில் தேர்தல் பிரசாரம் செய்தவர், என் தொகுதியை எட்டிப் பார்க்கவேயில்லை!

** ஜெயலலிதாவை எதிர்த்துக் கொண்டு அரசியல் பண்ண முடியும் என்று நினைக்கிறீர்களா?

பதில்: ஜெயலலிதாவைத் தவிர்த்து மற்றவர்களை ஒன்று சேர்க்கும் பணியில் எங்களைத் தள்ளி விட்டவர் ஜெயலலிதாவே தான். எம். ஜி. ஆரின், புகழுக்குக் களங்கம் கற்பிக்கும் அவரது போக்கைத் தமிழகமெங்கும் மேடை போட்டு விளக்குவோம். அ. தி. மு. க. தொண்டர்கள் மட்டுமல்ல, தமிழக மக்களும் ஜெயலலிதாவின் உண்மை சொரூபத்தை விரைவில் புரிந்து கொள்வார்கள்.

** 'தி. மு. க. வுக்குக் கட்சியை விற்றுவிடப் பார்க்கிறார் ஜெயலலிதா' என்று குற்றம் சாட்டியிருக்கிறீர்களே?

பதில்: தி. மு. க. எதிர்ப்புப் போக்கு என்பது ஜெயலலிதாவிடம் குறைந்து வருகிறது. மக்கள் பிரச்னைகள் பலவற்றில் கட்சியின் கருத்து என்ன என்பதையே தெரிந்து கொள்ள முடியவில்லை. அரிசி விலை உயர்வு, பஸ் கட்டண உயர்வு என்று பல பிரச்னைகளில் மக்களைத் திரட்டிப் போராட வேண்டிய கட்சி முடங்கிப் போனது. சமீபத்தில் ஜெயலலிதா ஓர் அறிக்கை விட்டார். ஆந்திராவிலிருந்து தமிழக அரசு அரிசி வாங்கியதில் ஊழல் நடந்துள்ளது என்று பொதுமக்கள் பரவலாகப் பேசியதைத்தான் மேடையில் தாம் பேசியதாக அதில் கூறியிருக்கிறார். இவர் காருடன் லாரி மோதியதை இப்போது 'விபத்து' என்கிறார். இவ்விஷயங்களில் தமிழக அரசு வழக்குப் போட்டிருப்பதால் இப்படிப் பின்வாங்கி முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவதா? எந்தப் பிரச்னையிலும் உறுதியாக நிற்காமல் இவ்வாறு அ. தி. மு. க. வைப் பலவீனமாக்கி விட்டால் தி. மு. க. வுக்குக் கொண்டாட்டம் தானே! அந்த அர்த்தத்தில்தான் அ. தி. மு. க. வை, தி. மு. க. வுக்கு விற்றுவிடப் பார்க்கிறார் ஜெயலலிதா என்று நான் குறிப்பிட்டேன்.

** இன்னமும் பல சமூகத் தலைவர்கள், எம். எல். ஏக்கள், எம். பிக்கள் ஜெயலலிதாவை விட்டு வரவில்லையே! காரணம், நாளை தேர்தல் வந்தால், அவரால்தான் வோட்டுவாங்க முடியும் என்பதுதானே?

பதில்: 1983 இல் இவர் கட்சிக்கு வந்ததிலிருந்து கட்சி பல தோல்விகளைச் சந்தித்துள்ளது. அப்போது நான்கு தொகுதிகளில் நடந்த இடைத்தேர்தல்களில் இரண்டில் அ. தி. மு. க. தோற்றது. அதேபோல் நகராட்சி, பஞ்சாயத்துத் தேர்தல்களில், எதிர்பார்த்த வெற்றி பெறவில்லை. ஏன், சமீபத்தில் பாண்டிச்சேரி சட்டமன்றத் தேர்தலில், இவர் பிரசாரம் செய்த பாண்டியில் கட்சி தோற்றது. இவர் பேசாத காரைக்காலில் கட்சி வென்றது. ஆகையால் ஜெயலலிதாவால்தான் வோட்டுக்களைப் பெற முடியும் என்பது தவறான கருத்து. புரட்சித் தலைவர் மேல் அழியாத பாசம் கொண்டிருக்கும் மக்கள் இருக்கும் வரை அ. தி. மு. க. வுக்கு ஆதரவு இருக்கும்

பேட்டி: ப்ரியன்.

படம்: சுபா.



# கல்கி

1990 ஜூலை 29
மலர் : 48 இதழ் 52
பிரமோதூத ஆடி 13


## குள்ளநரிகளின் கும்மாளம்!

'தர்மத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும்; தர்மம் மீண்டும் வெல்லும்' என்ற பாரதியின் வாக்கு மெய்யாகிவிட்டதாகப் பலர் கருதக்கூடும். ஆனால் சூது அழிந்து ஒழிந்து போய்விடவும் இல்லை; பயந்து வாலைச் சுருட்டிக் கொண்டுவிடவும் இல்லை. தருணம் பார்த்துக் காத்திருக்கிறது. அவ்வளவுதான்!

'சௌடாலாதான் துணைத்தேர்தலில் போட்டியிட்டுப் பூரண மெஜாரிட்டியுடன் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டாரே? இத்தனைக்கும் அவர் தொகுதிப் பக்கமே போகவில்லையே? எனவே, மக்கள் அவரை முழுமையாக நம்பி, ஏற்றுக் கொண்டு விட்டதாகத்தானே அர்த்தம்? ஜனநாயகத்தில் மக்களின் தீர்ப்புத்தானே, மகேசன் தீர்ப்பு? ஹரியானா சட்டமன்ற ஜனதா தளக் கட்சி, அவரை ஏகமனதாகத் தலைவராகத் தேர்ந்தெடுத்த பிறகு அவர் முதல்வராவதில் என்ன தப்பு?'

தவறு என்றோ, குற்றம் என்றோ கூறவே முடியாதுதான். சட்டப்படி எல்லாம் சரியாகத்தான் நடந்திருக்கிறது. ஆனால் சௌடாலா, ஹரியானா முதல்வராகத் தொடர்ந்து நீடித்திருந்தால், தார்மிக அரசியலுக்கு மரண அடி கொடுத்ததாக முடிந்திருக்கும். இதைத் தவிர்க்கத்தான் மத்திய மந்திரிகள் பலர் ராஜினாமா செய்தனர். பிரதமரும் கட்சித் தலைவரிடம் தமது ராஜினாமாவைத் தந்து, வேறு ஒருவரைப் பிரதமராகத் தேர்ந்தெடுக்கக் கோரினார்.

மேஹம் தொகுதியில் தேர்தலையொட்டி நடந்த படுகொலைகளும் முறைகேடுகளும் பயங்கரமானவை. அவற்றுக்குப் பொறுப்பேற்றுச் சௌடாலா ராஜினாமா செய்ய வேண்டும் என்ற கோரிக்கை எழுப்பப்பட்டு, அந்தத் தார்மிக வற்புறுத்தலுக்குத்தான் சௌடாலா மனமின்றியே தலைவணங்கினார். மேஹம் சம்பவங்களுக்கு ஸி. பி. ஐ. விசாரணை நடத்தப்படும், சௌடாலா மீண்டும் மேஹம் தொகுதியிலேயே தேர்தலுக்கு நின்று வென்றால்தான் களங்கம் தீர்ந்ததாகக் கருதப்படும் என்றெல்லாம் பிரதமர் உள்பட ஆட்சித் தலைவர்கள் பலரும் மக்களுக்கு உறுதி அளித்திருந்தனர்.

இந்த வாக்குறுதிகளைப் பற்றிக் கவலைப்படாமல், தமது மகன் மீண்டும் முதல்வராவதில் அக்கறை காட்டினார் தேவிலால். இதற்காக அவர் கையாண்ட தந்திரங்கள் பல; கூறிய புனைந்துரைகளும் பல. எனவேதான், சௌடாலா மீண்டும் முதல்வரானதும் தேசமே வெகுண்டு, வன்மையான கண்டனக் குரல் எழுப்பியது! மத்திய மந்திரிகள் பலர் மட்டுமின்றி, பிரதமரும் ராஜினாமா சமர்ப்பிக்க, தேவிலால் வழிக்கு வந்தார். சௌடாலா நிபந்தனையின்றி ராஜினாமா செய்ய, அவருக்குப் பதில் ஹுக்கும்சிங் முதல்வராகியிருக்கிறார்.






முதல்வராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கையோடு, "நான் ஒரு பொம்மைதான்; இல்லை, பொம்மையைவிடத் தரம் தாழ்ந்தவன்தான்" என்று ஹுக்கும்சிங் வெட்கமின்றிப் பகிரங்கமாக அறிவிக்கிறார். அதாவது, 'சௌடாலாதான் ஹரியானாவின் மெய்யான முதல்வர்; அவர் 'விருப்பப்படிதான் எல்லாம் நடக்கும்' என்று முதுகெலும்பின்றிக் கூறுகிறார்.

வி. பி. சிங்கை உசுப்பிவிட்ட மூன்று மந்திரிகளைப் பழிவாங்கக் கருதி, அந்த முயற்சியில் தோல்வியுற்ற தேவிலாலோ, 'என்னால் உருவாக்கப்பட்ட தேசிய முன்னணி, என்னாலேயே கவிழ்ந்துவிடக் கூடாது என்பதற்காகத்தான் விட்டுக் கொடுக்கிறேன்' என்று கர்வத்துடன் பேசுகிறார்.

ஆகமொத்தம் சௌடாலா, தம்மையே முதல்வர் என்றும் ஹுக்கும்சிங்கை வெறும் 'டம்மி' என்றும் கருதுவது போல்தான், தேவிலாலும் தாமே மெய்யான பிரதமர் என்றும் வி. பி. சிங் வெறும் 'டம்மி' என்றும் கருதுகிறார் எனத் தோன்றுகிறது. இந்தக் குள்ளநரிகளின் கும்மாளம் இத்துடன் முடிவடையாது. பிரதமரையும் அருண் நேரு, ஆரீப் முகமதுகான் போன்ற அமைச்சர்களையும் பழிவாங்கத் தருணம் எதிர்நோக்கித்தான் காத்திருக்கும். பழிவாங்க முடியாவிட்டாலும் தொல்லை கொடுத்துக் கொண்டே இருக்கலாம் என்றுதான் திட்டமிடும். இவர்களது பிராண்டலைச் சகித்துக் கொண்டே, தேசத்தின் முன் நிற்கும் பிரும்மாண்டப் பிரச்னைகளைச் சமாளிப்பது என்பது முடியாத காரியம்.

எனவே, வி. பி. சிங் கொஞ்சம் துணிச்சல் காட்ட வேண்டும். 'தேவிலாலும் அவரது திருமகனாரும் மறுபடியும் அதர்மப்போக்கில் இறங்கிப் படுத்த ஆரம்பித்தால், நான் ராஜினாமா செய்வதற்குப் பதில், தேவிலாலின் ராஜினாமாவைக் கோருவேன்' என்பதாக அவர்களுக்கு உணர்த்த வேண்டும். அப்படிக் கோரும் போது உருவாகக் கூடிய சூழ்நிலை, இப்போது உள்ளதைவிட மோசமாகிவிடாது.

அதர்மத்தைப் பொறுத்துக் கொண்டு போக வேண்டிய தருணமும் உண்டு; எதிர்த்து நிற்க வேண்டிய சமயமும் உண்டு. பாரதம் உணர்த்தும் இந்த உண்மையைத் தாம் அறியாதவர் அல்ல என்பதைப் பிரதமர், குள்ளநரிகளுக்குக் கோடி காட்டட்டும்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



ரம்யா — ராம்கி: முருகானந்தத்துக்குப் 'புதிய சரித்திரம்'

●● ''வேடிக்கை என் வாடிக்கை'' படம் மூலம் பிரபலமடைந்த நடிகை திவ்யா, தம்முடைய பெயரைத் 'திவ்யவாணி' என்று மாற்றிக் கொண்டார். 'ஆத்ய மாய்' என்ற மலையாளப் படம் ஒன்றில் நீச்சல் உடையில் அதிகம் வருகின்றார். சென்சாரில் திவ்யவாணி நடித்த காட்சிகளை மொத்தமாய்க் கத்திரித்துக் கையில் கொடுத்து விட்டார்கள்! படம் ரிலீஸ் செய்ய வேண்டிய தேதி தாண்டிப் போகிறதே என்று 'ஆத்யமாய்' பட யூனிட் வாணியைத் தேடிக் கொண்டு இப்போது சென்னைக்கு வந்துவிட்டது. நீச்சல் உடைக் காட்சிகளுக்குப் பதில் புடைவை



# சென்ஸார் கெடுபிடி வலுக்கிறது...

கட்டிக் கொண்டு நடிக்கச் சொல்லி, அதைப் படத்தோடு சேர்க்கத் திட்டம். அந்தக் காட்சிகளைச் சென்னையிலேயே ஷூட் செய்து கொண்டு போய்விடலாம் என்று முடிவு செய்துள்ளார்கள்.

இப்போது சென்ஸார் உஷாராகி விட்டது என்பதற்கு இன்னுமோர் உதாரணம்: அமலா — நாகார்ஜுன் நடித்த 'இதயகீதம்' படத்தில் ஒரு பாடல் காட்சி முழுவதையும் வெட்டி விட்டார்கள்! ஆபா வாணனின் 'இணைந்த கைகள்' சென்சாரின் பிடியில் சிக்கிக் கொண்டு சிதைக்கப்பட்டது!

●● ராம்கி முதன் முதலில் இரட்டை வேடத்தில் நடிக்கும் படம் 'புதிய சரித்திரம்.' இந்தப் படத்தை பிலிம் இன்ஸ்டிட்யூட் மாணவர் முருகானந்தம் இயக்குகிறார். இவர் ராபர்ட் — ராஜசேகர் என்ற இரட்டையர்களில் ராபர்ட்டின் சிஷ்யர். வெகு காலமாய் டைரக்‌ஷன் வாய்ப்புக் கிடைக்காமல் அலை பாய்ந்து கொண்டிருந்தவருக்கு ராபர்ட் மூலம்தான் இந்தப் 'புதிய சரித்திரம்' கிடைத்தது. ராபர்ட் — ராஜசேகர் பிரிவுக்குப் பின்பு ராபர்ட் தம்முடைய பெயரை ராபர்ட் ஜெயக்குமார் என்று நீட்டிக் கொண்டார். 'புதிய சரித்திரம்' படத்திற்கு டைரக்‌ஷன் மேற்பார்வை செய்கின்றார். இது முழுக்க முழுக்க மசாலா படம் என்கிறார் ராபர்ட்!

●● இதுவரை ஆக்‌ஷன் ஹீரோவாக நடித்துவந்த அர்ஜுன், 'தங்கத் தாமரைகள்' என்ற படத்தில் ஒரு மென்மையான காதலனாக நடிக்கின்றார். இந்தக் காதல் கதையில் அர்ஜுனுக்கு மிகுந்த ஈடுபாடு. ''நான் வெறும் அடிதடிக்கு மட்டுமின்றிச் சிறப்பான நடிப்புக்கும் லாயக்கானவன் என்பதை நிரூபித்துக்காட்ட இந்தப் படம் எனக்கு ஒரு வாய்ப்பு'' என்று கூறிவருகிறார் அர்ஜுன். ''இதுவரை ஆக்‌ஷன் ஹீரோவாக அர்ஜுனைப் பார்த்த மக்கள், அடக்கமான இளைஞனாக ஒப்புக் கொள்வார்களா?'' என்பது

தங்கத் தாமரைகள்: ''அழகப்பன் படம்...''

## மினி சினி செய்திகள்:

டிஸ்ட்ரிப்யூட்டர்களின் கேள்வி! அர்ஜுன் படம் என்றால் அடித்துப் பிடித்துக் கொண்டு வாங்குபவர்கள் கூட யோசிக்க, பட இயக்குனர் வி. அழகப்பன், ''இது அர்ஜுன் படமல்ல; அழகப்பன் படம்'' என்று கூறி வியாபாரம் பேசுகின்றார்!

— எஸ். பாலு



திவ்யவாணி: பெயர் மாற்றமும் உடை மாற்றமும்...



உங்கள் குடும்ப ஆரோக்கியத்திற்கான டின்
1கிலோ சாக்கலேட் காம்ப்ளான்
Complan
COMPLETE PLANNED FOOD
CHOCOLATE FLAVOUR
FREE!
Collect a ceramic mug with this pack.
No need to add milk
இலவசம்!
Complan
இரண்டு 500 கிராம் டின்களுக்குப் பதில், வாங்குங்கள் 1 கிலோ சாக்கலேட் காம்ப்ளான் டின், மிச்சமாக்கிடுங்கள் 4 ரூபாய். அத்துடன் ஒரு பீங்கான் குவளை இலவசம். உங்கள் குடும்பத்தினருக்கு அன்றாடம் தேவைப்படும் மூலாதார சத்துணவுகள் கொண்டதாகும், காம்ப்ளான்.
வாங்குங்கள் இன்றே.
23
மூலாதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்
காம்ப்ளான்®


GX/58/213 TML

# "அம்மையாருக்குக் கட்டுப்பட்டு அ.தி.மு.க.வில் இருக்கவே விரும்புகிறேன்"



"புகழ் பெற்றவனாக இருப்பதை விட விசுவாசமானவனாக இருப்பதே நல்லது" இப்படி ஒரு வாசகத்தை எழுதி வைத்திருக்கிறார்கள்; லாயிட்ஸ் ரோடு, அ. தி. மு. க. தலைமையகத்தில். இன்றையச் சூழ்நிலையைப் பார்க்கிற போது, "ஜெயலலிதாவுக்கு" என்று அந்த வாசகத்துடன் சேர்த்துக் கொண்டால் மிகப் பொருத்தமாக இருக்கும் என்று தோன்றுகிறது.

எஸ். டி. சோமசுந்தரம் தம்பு புரட்சித் தலைவியின் அறிக்கைப் பிரதிகளை விநியோகிக்கிறாரே தவிர, கேள்விகளைத் தவிர்க்கிறார்.

செ. மாதவனிடம் டெலிபோனில் அப்பாயிண்ட்மெண்ட் கேட்ட போது, "தலைமையகத்தில் வேறு யாரையாவது சந்தியுங்கள்" என்று கூறி விட்டார்.

அரங்க நாயகத்தைச் சந்தித்தோம்.

"அந்த அம்மையாருக்கு உடல் சௌகரியமில்லை (சற்று நேரம் தொடர்ந்தாற்போல உட்காரவோ, நிற்கவோ சிரமப்படுகிறார்) எனவே அவருக்குக் கட்சிப் பணிகளில் உதவுவதற்காக உயர் மட்டக் குழு அமைக்கப்பட்டுள்ளது" என்றார்.

"உயர்மட்டக் குழு எடுக்கும் முடிவுகளின் படிதான் ஜெயலலிதா செயல்படுகிறாரா?"

"இல்லை. உயர்மட்டக் குழுவின் முடிவுகள் அவரைக் கட்டுப்படுத்தாது. அவர் கட்டளைப்படி நாங்கள் செயல்படுவோம். கொள்கை அளவில் முடிவுகள் எடுப்பது உயர்மட்டக் குழுவின் பணி அல்ல. புரட்சித் தலைவரின் கொள்கைகளை அந்த அம்மையார் பின்பற்றி வருவதால், நாங்கள் அவரைப் பின்தொடர்கிறோம்."

"கட்சியின் முக்கியமான பிரமுகர்களை உயர்மட்டக் குழுவில் சேர்த்துக் கொள்ளாததுடன், அவர்களில் சிலரைக் கட்சியை விட்டே வெளியேற்றியும் இருக்கிறாரே ஜெயலலிதா?"

"கட்சி விரோத நடவடிக்கைகளில் யார் யார் ஈடுபடுவதாய் அந்த அம்மையார் நினைக்கிறாரோ, அவர்கள் கட்சிக்குத் தேவையில்லை என்று அந்த அம்மையார் கருதுகிறார். எனவே வெளியேற்றுகிறார். இதில் என்ன தவறு?"

"இத்தகைய செயல்களால், அ.இ.மு.க. கட்சி பாதிக்கப்படாதா?"

"அ. இ. அ. தி. மு. க. கட்சித் தொண்டர்கள் முழுக்க முழுக்க ஜெயலலிதாவின் பின்னால்தான் இருக்கிறார்கள். தி. மு. க. அரசு மக்கள் செல்வாக்கை இழந்து விட்டது. தேர்தல் வந்தால், ஓர் இடம் கூடக் கிடைக்காது. அ. இ. அ. தி. மு. க. தான் ஆட்சிக்கு வரும். ஜெயலலிதாவை எதிர்த்துக் கொண்டு, அ. இ. அ. தி. மு. க. வில் யாரும் இருக்க முடியாது. அவர்களுக்கு மக்களிடம் செல்வாக்கு இராது. நால்வர் அணி அமைந்த போது எங்களுக்கு ஏற்பட்ட கதி எல்லோரும் அறிந்ததுதானே! எனவே அந்த அம்மையாருக்குக் கட்டுப்பட்டு, நாங்கள் அ. இ. அ. தி. மு. க. விலேயே இருக்க விரும்புகிறோம்" என்று முடித்தார் அரங்கநாயகம்.

அ. தி. மு. க. பிரமுகர்கள் வெளியேற்றப்பட்டது குறித்துக் கண்டனம் தெரிவிக்கும் தொனியில் ஆர். எம். வீ. பேசியிருந்த போதிலும் அவர் மீது இன்னும் ஒழுங்கு நடவடிக்கை அஸ்திரம் ஏவப்படாமலிருப்பது அரசியல் வட்டாரத்தில் ஆச்சர்யம் ஏற்படுத்தியுள்ளது.

— நிருபர்

படம்: சுபா

# ஓ, நந்தலாலா!

கௌஷிகன்

அறிவாளிகளால் எந்தக் காலத்திலும் காதலிக்கவே முடியாது. காதல் என்பது பைத்தியக்காரத்தனமானது. வெறும் உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பைத்தியக்காரத்தனமான காரியங்களைக் காதலில் செய்ய வேண்டும். காதலன் பெயரைக் கையில் பச்சைக் குத்திக் கொள்ள வேண்டும். காதலி பெயரை நோட்டுப் புத்தகத்தில் ஸ்ரீராம ஜெயமாக எழுத வேண்டும்; சினிமாவில் வரும் நாயகன், நாயகியைத் தானாகக் கற்பனை செய்து மகிழ வேண்டும்; தனக்குத் தானே பேசிக் கொள்ள வேண்டும்; தலைகாணிக்கு முத்தம் கொடுக்க வேண்டும். அறிவாளிகளால் இப்படிச் செய்ய முடியாது. ஒரு காரியத்தைச் செய்யும் போதே 'நாம் இப்போது என்ன செய்கிறோம்' என்று யோசிப்பவர்களால் இக்காரியங்களைச் செய்ய முடியாது.

அதிலும் பகவத்கீதை படித்து, தத்துவ விசாரணை செய்து, வாழ்க்கை ஒரு பெரிய மாயம் என்று புரிந்து கொண்டுவிட்ட, அதற்குப் பின் ஒரு பெண்ணைக் காதலிப்பது என்பது கஷ்டமான காரியம். அதனால்தானோ எனக்கு நித்யாவின் காதல் வரவர எரிச்சலை மூட்டுகிறது. அதனால்தானோ, இதோ, இப்போது நித்யாவைப் பார்ப்பதற்காக அண்ணா சதுக்கத்தை நோக்கி வேக வேமாய் நடக்கும்போதும், 'ஏன் இப்படி நான் வேகமாய் ஓடுகிறேன்; என்ன இருக்கிறது அங்கே?' என்ற வெறுப்பு ஏற்படுகிறது. அதனால் தானோ, 'நினைவெல்லாம் நித்யா; நித்யா; நித்யா' என்று உருகி உருகிப் பாடியதை இப்போது நினைக்கையில் முட்டாள்தனமாய் இருக்கிறது.

என்ன ஆயிற்று எனக்கு? நான் ஏன் இப்படி மாறிவிட்டேன்? சம்சார வாழ்க்கையில் ஒரு பிள்ளைக்குத் தந்தையான பிறகு, புத்தருக்கு வந்த ஞானம், எனக்கு ஆறு மாத காதல் வாழ்க்கையில் வந்துவிட்டதா? நான் தத்துவமே படித்திருக்கக் கூடாதோ? பகவத்கீதையில் கண்ணன், 'நீ வெறும் கருவி; உன்னை இயக்குபவன் நான்' என்று கூறியதைப் புரிந்து கொண்டபின் இயல்பாய் வாழ்வது கடினமோ?



நான் எங்கே இப்படி ஓடுகிறேன்? காமராஜர் சாலையில் இப்போது அண்ணா சதுக்கத்தை . நோக்கிப் போகிறேன். எதற்காகப் போகிறேன்? அங்கே நித்யா எனக்காகக் காத்துக் கொண்டு இருப்பாள். அவளைக் காண்பதற்காக இப்படி ஓடுகிறேன்.

யார் இந்த நித்யா? ஒரு கருவி. நான் யார்? இன்னொரு கருவி. இரண்டு கருவிகளும் ஒன்றையொன்று காதலிக்கின்றன. ஒரு ஸ்பேனர் ஒரு 'நட்' மீது ஆசைப்படுகிறது. இதற்குப் பெயர்தான் காதல்!



ஆனால் ஸ்பேனரால் தானாகவே போய் அந்த 'நட்'டோடு பொருந்திக் கொள்ள முடியாது. கண்ணன் இயக்க வேண்டும். இயக்கப்பட்டு, ஆசைப்பட்ட ஸ்பேனரும் நட்டும் ஒன்று சேர்ந்தால் அங்கே காதலுக்கு வெற்றி. இல்லாவிடில் காதல் தோல்வி.

எந்த ஸ்பேனருக்கு எந்தத் திருகாணி என்பது யாருக்கும் தெரியாது. ஸ்பேனரும், நட்டும் சரியான அளவில் அமைந்தால் அதிர்ஷ்டம். சில சமயங்களில் அளவு சரியாக அமையாமல் போய் விடும். ஒன்று, வழுக்கிக் கொண்டு ஓடும்; இல்லையென்றால் பிடிமானமே விழாது. அந்தச் சமயங்களில் ஸ்பேனரும் நட்டும் ஒன்றை மற்றொன்று குறை

சொல்லிக் கொண்டு புலம்பும்.

தானாகவே இயங்காவிட்டாலும், ஸ்பேனருக்கும் 'நட்'டுக்கும் தானே தான் இயங்குவது போன்ற பிரமை. இரண்டிற்கும் ஆயிரம் ஆயிரம் கனவுகள், கற்பனைகள். ஒரு நட் அண்ணா சதுக்கத்தில் ஆயிரம் கனவுகளோடு காத்திருக்கிறது. ஒரு ஸ்பேனர் அந்த 'நட்'டைத் தேடிக் காமராஜர் சாலையில் ஆயிரம் கற்பனைகளோடு வேக வேகமாய் நடக்கிறது.

எனக்குச் சிரிப்பு வந்தது. நடையை மெதுவாக்கிக் கொண்டேன்.

அண்ணா சதுக்கத்தை நெருங்கி விட்டேன். மஞ்சள் நிறப் புடைவையில் சாயந்திர மஞ்சள் கலக்க, நித்யா புன்னகையோடு நின்றிருந்தாள். நேப்பியர் பாலத்தின் நிழல் அழுக்குத் தண்ணீரில் நீளமாய் விழுந்திருந்தது. நித்யா சந்தோஷமாய் என்னை நோக்கி வந்தாள். என் கையோடு தன் கையைக் கோத்துக் கொண்டாள்.

"நீ வராம இருந்துடுவியோன்னு நெனைச்சேன் சேகர். நல்லவேளை வந்துட்டே" என்றாள்.

"நான் ஒன்றும் பேசவில்லை. இருவரும் மெரீனாவை நோக்கி நடந்தோம். வழியெல்லாம் மக்கள் ஸ்பேனரும், 'நட்டு'மாய்த் தெரிந்தார்கள். சாலையோரங்களில், ஒவ்வொரு விளக்குக் கம்பத்திற்குக் கீழும், மணல்வெளியில், கடலின் நீர் விளிம்பில், படகுகளின் மறைவில் — எங்கே பார்த்தாலும் ஸ்பேனரும், 'நட்டு'மாய்த்தான் தெரிந்தார்கள்.

ஆடாத மேடை இல்லை;
போடாத வேஷம் இல்லை;
சிந்தாத கண்ணீர் இல்லை;
சிரிப்பிற்கும் பஞ்சம் இல்லை.

— வாயில் வந்த பாட்டைப் பாடினேன்.

"சிம்லா ஸ்பெஷல் தானே இந்தப் பாட்டு?" என்றாள் நித்யா. ஏதாவது பேச வேண்டும் என்று பேசினாற்போல் இருந்தது.

"ம்ம்" என்றேன். என்னால் அதற்கு அதிகமாகப் பேச முடியவில்லை.

நாங்கள் வழக்கமாய் உட்காரும் படகுக்குப் பின்புறம் போய் உட்கார்ந்து கொண்டோம். கடல் தன் அலைக்கரங்களால் பூமியோடு சண்டை போட்டுப் போட்டு மீண்டும் மீண்டும் தோற்றுக் கொண்டு இருந்தது. தூரத்தில் ஹார்பரில் கப்பல்களில் விளக்குகள் போடப்பட்டிருப்பது தெரிந்தது. மேற்கில் சூரியன் காணாமல் போயிருந்தான்.

மணலில் இரண்டு குழந்தைகள் இன்னும் பந்து விளையாடிக் கொண்டிருந்தன. ஒரு குழந்தை பந்தைத் தூரத்தில் வீசி எறிந்துவிட்டுக் கைதட்டி, சந்தோஷமாய்க் குதித்தது. சிறுவயதில் கிராமத்தில் பார்த்த பொம்மலாட்டம் ஞாபகத்திற்கு வந்தது.

கால் கொண்டு ஆடும் பிள்ளை.
நூல் கொண்டு ஆடும் பொம்மை.,

"என்ன சேகர் பேசவே மாட்டேங்கிறே?" குரல் கேட்டு நித்யா பக்கம் திரும்பினேன். அவள் என்னையே பார்த்துக்கொண்டு இருந்தாள். குரல் லேசாகப் பிசிறடித்தது.

"ஒண்ணுமில்லை" என்றேன்.

"இல்லை சேகர். இப்பவெல்லாம் நீ முன்ன மாதிரி இல்லே. ரொம்ப மாறிட்டே. வரவர உனக்கு என்னைப் பிடிக்கிறதே இல்லே. என்கிட்டே நீ சரியாப் பேசறதே இல்லே. நீ எங்கிட்டேர்ந்து கொஞ்சம் கொஞ்சமா விலகிப் போற மாதிரி எனக்குத் தோணுது" — நித்யா உடைந்து போய்க் கூறினாள்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. இவளுக்குப் புரிகிறது. இவள் என்னைப் படிக்கிறாள். நான் எப்படி இவளுடைய கோணத்தில் யோசிக்காமல் விட்டேன்?!

**பட்டுக்கோட்டைத் தொகுதி வாசகர்களே!**

மாதம் ஒரு தொகுதி திட்டத்தின் கீழ் உங்கள் தொகுதியை விரைவில் 'விசிட்' செய்ய இருக்கிறோம். எனவே, தொகுதி வளர்ச்சிக்கான யோசனைகள் மற்றும் உங்களது தீர்க்கப்படாத பிரச்னைகளை எழுதுங்கள். நேரில் வந்து பார்த்துவிட்டு, உங்கள் எம். எல். ஏ.விடம் எடுத்துச் செல்வோம்.

'மாதம் ஒரு தொகுதி' என்று குறிப்பிட்டு நீங்கள் எழுதும் கடிதம் 3.8.90 க்குள் எங்களுக்கு வந்து சேர வேண்டும்.

— ஆசிரியர்.

**மாதம் ஒரு தொகுதி**




"எனக்குப் பிடித்த
சக-நடிகரா?
ஸின்த்தால்!
மூன்று ஷிஃப்ட்களில்
நடித்த பிறகும்
அது என்னை
புத்துணர்ச்சியுடனும்
எழிலுடனும் வைக்கிறது."
Godrej
CINTHOL
LUXURY
TOILET POWDER
CINTHOL FOR FRESHNESS ALL DAY LONG
PROTECTIVE • SOOTHING • FRAGRANT
CINTHOL
கோத்ரெஜ்
தயாரிப்பு
ஸின்த்தால் - நாள்முழுதும் புத்துணர்ச்சியூட்டும் நறுமணம்
MADISON-C-48-TAM

உலகக் கோப்பை, கால்பந்துப் போட்டி தொடர்பாகத் தஞ்சையில் உள்ள டிபன் கடை ஒன்றில் இந்தக் கரும்பலகை வாசகம் காணப்பட்டது!

"—இன்றைய ஸ்பெஷல்—
அர்ஜென்டைனா அல்வா
இத்தாலி சப்பாத்தி கிடைக்கும்!"

— பா. து. பிரகாஷ்.



"ஏய் ஏய்! என்னாச்சு உனக்கு? ஏன் இப்ப அழறே? ஏன் இப்படி சென்டிமென்ட்டலாப் பேசறே?" என்றேன்.

"இல்லை சேகர். சென்டிமென்ட்டலாப் பேசல. உண்மையிலேயே நீ என்னை விட்டுட்டுப் போற மாதிரி இருக்கு. ஆனா... ஆனா ஒண்ணு மட்டும் நிச்சயம் சேகர். நீ அப்படிப் போயிட்டா நான் அப்புறம் உயிரோட இருக்க மாட்டேன்" நித்யா முழுவதுமாய் உடைந்து போனாள்.

அதிர்ந்து போனேன். இத்தனை அன்பா இந்தப் பெண்ணுக்கு என் மேல்? அவளை நெருங்கி, அவள் தோளை அணைத்துக் கொண்டேன். அவள் கன்னத்தில் வழிந்த நீரைத் துடைத்தேன். அவள் ஆதரவாய் என் மார்பில் சாய்ந்து கொண்டாள்.

"பைத்தியம், ஏன் இப்படி எல்லாம் பேசறே? எனக்கு ஆஃபீஸ்ல கொஞ்சம் வேலை — டென்ஷன். அவ்வளவுதான். வேற ஒண்ணுமில்லை. நான் உன்னை விட்டுட்டுப் போயிடுவேனா? எனக்கு உன்னை விட நல்ல பொண்ணு எங்கே கிடைப்பா? ஏன் இப்படி அனாவசியமாப் பயப்படறே?" என்று கனிந்த குரலில் கூறினேன்.

"சத்தியமா என்னை விட்டுட்டுப் போக மாட்டியே?" என்றாள்.

"சத்தியமாப் போக மாட்டேன்" என்றேன்.

"அப்ப என் தலைமேல் கைவைச்சுச் சத்தியம் பண்ணு" என்றாள்.

அவள் தலைமீது கையை வைத்து, "சத்தியமா உன்னை விட்டுட்டுப் போக மாட்டேன்" என்றேன்.

பைத்தியக்காரத்தனமாக இருந்தது. ஆம். இது பைத்தியக்காரத்தனம் தான். ஆனால் வாழ்க்கையில் பிறகு எதுதான் சரி? எதுதான் பைத்தியக்காரத்தனம் இல்லை?

வாழ்க்கை மாயம் என்னும் பட்சத்தில், பணத்துக்காக அங்கும் — இங்கும் ஓடிப் பொருளைச் சேர்ப்பது பைத்தியக்காரத்தனம் இல்லையா? வாழ்க்கை மாயம் என்னும் பட்சத்தில், ஒரு முக்கோணத்தை வைத்துக் கொண்டு சைன், காஸ், டேன் என்று படிப்பது பைத்தியக்காரத்தனம் இல்லையா? வாழ்க்கை மாயம் என்னும் பட்சத்தில், பந்தை ஓங்கி மட்டையால் அடித்து விட்டு, ஆயிரக்கணக்கான மக்களின் கைதட்டலுக்கு இடையில், இரண்டு பக்க விக்கெட்டுகளுக்கு இடையில் குறுக்கும் நெடுக்குமாய் ஓடுவது பைத்தியக்காரத்தனம் இல்லையா? ஆபீஸில் டைப் ரைட்டரோடு மாரடிப்பது பைத்தியக்காரத்தனம் இல்லையா? பாங்க் அக்கவுண்டில் பணம் போடுவது பைத்தியக்காரத்தனம் இல்லையா? ஏன்... வாழ்க்கை மாயம், மாயம் என்று புலம்புவதே பைத்தியக்காரத்தனம் இல்லையா? காதல் மட்டும்தானா பைத்தியக்காரத்தனம்?

நான் ஏன் இப்படிக் குழப்பிக் கொள்கிறேன்? கீதையில் கண்ணன் என்ன சொல்கிறான்? 'கருமத்தைச் செய்' என்கிறான். ஏன், காதல் ஒரு கருமம் இல்லையா? அர்ஜுனனுக்குக் கண்ணன் சண்டை போட மட்டும்தான் 'கருமத்தைச் செய்' என்றானா? காதல் கருமத்திற்கு இல்லையா?

புரிகிறது. காதலும் ஒரு கருமம்தான். நான் ஏன் அதில் கர்மயோகம் செய்யக் கூடாது. கண்ணன் மேலிருந்து இயக்கட்டும். நான் கீழே காதல் கருமத்தைச் செய்கிறேன்.

'தூரத்தில் பந்து விளையாடிய குழந்தைகள் இருவரும் இப்போது மணலில் சோர்ந்து போய் உட்கார்ந்திருந்தார்கள்.

கால் கொண்டு ஆடும்
பிள்ளை
நூல் கொண்டு ஆடும்
பொம்மை
உன் கையில் அந்த நூலா
நீ சொல்லு நந்தலாலா.

நித்யாவைத் திரும்பிப் பார்த்தேன். தெளிவடைந்திருந்தாள் போலத் தோன்றிற்று. நானும்தான். மெதுவாக அவள் நெற்றியில் முத்தமிட்டேன்.

"எழுந்திரு நித்யா! டைம் ஆச்சு" என்று காதோடு முனகினேன். மனமில்லாமல் இருவரும் எழுந்தோம்.

உனக்கென்ன மேலே
நின்றாய் ஓ நந்தலாலா
உனதாணை ஆடுகின்
றேன் நான் ரொம்ப
நாளா

சன்னமான குரலில் பாடிக் கொண்டு, நித்யாவின் கையை என் கையில் புதைத்துக் கொண்டு, பஸ் ஸ்டாண்ட் நோக்கி நடக்க ஆரம்பித்தேன்.

ஆனந்த் A/c
4 காட்சிகள்
உதயம் A/C
3 காட்சிகள்
சக்தி அபிராமி A/C
4 காட்சிகள்
மகாராணி
பகல் காட்சி

சுஜாதா
புரொடக்‌ஷன்ஸ் (பி) லிட்.



# அஞ்சலி

மணி ரத்னம்
இளையராஜா
G.வெங்கடேஸ்வரன்





GV பிலிம்ஸ் வெளியீடு

ELEGANT

# மணல்வெளி மான்கள்

29

ரஞ்சிதத்தின் கடைசி மூச்சு 10.10க்கு அடங்கிற்று. மரண வாக்குமூலத்தில் இடது கைப்பெருவிரல் ரேகையைப் பதிக்கும் வரை அவன் உயிரோடிருந்தான். இதை, வார்டு பாய் யாரிடமோ சொல்லிக் கொண்டிருந்தான்.

ஐ. ஸி. யூனிட்டிலிருந்து வாக்குமூலம் பதிவு செய்தவர்கள், மாஜிஸ்திரேட், டாக்டர் என்று ஒருவர் பின் ஒருவராக வந்தனர். கடைசியில் பிலோமினா.

நித்யா அமர்ந்திருந்த பேஞ்சின் மீது கௌதம் சாய்ந்து நின்றிருந்தான்.

மரண வாக்குமூலத்தின் போது தான் உடனிருந்திருக்க வேண்டுமோ?

இல்லை.

தான் எதிரே நிற்பது ரஞ்சிதத்தின் மனசுக்கு இன்னும் வருத்தம் அளித்திருக்கும். இன்னும் அவனைக் கூனிக் குன்ற வைத்திருக்கும்.

''என்ன ஸிஸ்டர்?''

ஸிஸ்டர் பிலோமினா ஒரு வருத்தப் புன்னகையோடு சிலுவை தரித்துக் கொண்டாள்.

புரிந்தது. கேட்க என்ன இருக்கிறது? ரஞ்சிதத்தின் அந்தச் சொற்ப கால வாழ்வு. விட்டலாபுரம். மாசிலா. அவள் மீது மிச்சமிருந்த வெறுப்பு. இன்னும் மனசின் ஒரு மூலையில் கண்விட்டெரிந்த வெறுப்பு. அதுவும் தணிந்தது. காற்று கொண்டு போன சாம்பல் போல் மனசை விட்டு அகன்றது.

''கடைசி நேரத்திலே ரஞ்சிதம் உன் மேலே ரொம்ப மரியாதை காட்டினா...''

பிலோமினா சொன்னதைக் கௌதம் கேட்ட போது அவனுக்கு வேதனை வந்தது.

ரஞ்சிதத்தின் மீது அவனுக்கு எந்த மரியாதையும் இருந்ததில்லை.

''மாசிலாவின் மரணத்துக்காக நீ வேதனைப்பட்டதைக் கண்ணீர் விட்டுக்கிட்டே சொன்னான். ஆதிக்காக நீ அலைஞ்சதையும், அவ உயிர் பிழைக்கணும்னு ஆஸ்பத்திரிக்குத் தூக்கிட்டு வந்ததையும் சொல்லும் போது அவ தொண்டை அடைச்சுட்டுது.''

கௌதமுக்கு முதுகு சிலிர்த்தது. சுரீலென்று எதுவோ சிரசுக்கு ஏறிற்று.

''உன்னைப் பத்திச் சொன்னப்பல்லாம் அவ கை கும்பிட்டது.''

நல்லவேளை தான் மரண வாக்குமூலத்தின் போது கூட இல்லை என்று நினைத்தான். கௌதமின் கண்கள் தரை பார்த்தன.

''பாவம்... அவள் பசங்களுக்கு மயங்கிட்டா.''

பிலோமினா மீண்டும் சிலுவை தரித்துக் கொண்டாள்.

இப்போது கௌதம் அவளை நிமிர்ந்து பார்த்தான்.

''கடைசி நேரத்திலே அவன் மயக்கம் தெளிஞ்சுட்டுது.''

அதற்கு மேல் பிலோமினா ஒன்றும் சொல்லவில்லை. மீதி யாவும் தனக்குச் சம்பந்தமற்றவை, அப்பாற்பட்டவை என்று ஒதுக்கிய ஒரு நிர்விசாரம் அவள் முகத்தில் வெளிப்பட்டது.

கௌதமும் கேட்கவில்லை.

மரண வாக்குமூலத்தில் ரஞ்சிதம் என்ன சொன்னான் என்று ஸிஸ்டர் பிலோமினாவைக் கேட்பது சரியில்லை. இவள் பிரார்த்திக்கப் போனவள்.

''சரி, அடுத்து என்ன செய்யறது?''

''வக்கீலைப் பார்க்கணும்.''

''அதைச் சொல்லலே.''

''பின்னே?''

''நித்யா விஷயத்திலே...''

அவன் திரும்பி பேஞ்சில் அமர்ந்திருந்த நித்யாவைப் பார்த்தான்.

அவள் இருவரையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''என்ன பண்ணலாம், நீங்களே சொல்லுங்க!''

''இது நல்ல கதையா இருக்கே!'' என்று முகம் சுளித்தாள் பிலோமினா.

''ஐ ஆம் ஸாரி ஸிஸ்டர், அவளையே கேளுங்க.''

''அவதான் முன்னாடியே எங்கிட்டே சொல்லிட்டாளே.''

''இப்பக் கேளுங்க.''

ஸிஸ்டர் பிலோமினா அவன் பக்கம் திரும்

வையவன்

பிய போது நித்யா வேன் கதவைத் திறந்து கொண்டு எழுந்து வெளியே வந்தாள்.

"என்னம்மா சொல்றே நித்யா?"

"அம்மாவை அழைச்சுக்கிட்டு ஊருக்குப் போறேன் சிஸ்டர்."

பிலோமினாவின் நெற்றி அதிர்ச்சியால் விரிந்தது.

"அந்த பிளான்லேயா வந்தே?"

நித்யா தலைகவிழ்ந்தாள்.

பிலோமினா கௌதமைப் பார்த்தாள்.

அவன் புன்னகை செய்தான்.

"சொல்லும்மா. கௌதம் பின் வாங்க றாரா?"

அவள் சட்டென்று தலையுயர்த்தி அவசர அவசரமாக மறுத்தாள்.

"இல்லே சிஸ்டர். இல்லே."

"அப்புறம்?"

அவள் மூக்கும் உதடும் துடித்தன. கண் ஒரு முறை பிலோமினாவைப் பார்த்து விட்டுத் தாழ்ந்தது.

"இவ கொஞ்சம் அவசரப்பட்டுட்டா சிஸ்டர்" என்று கௌதம் முந்தினான்.

"புரியல்லே."

"ஓடிப் போய்த்தான் சாதிக்கணும்னு இல்லே. நின்னே சாதிக்கலாம். அம்மாவையே துணைக்கு அழைச்சு வர்ற நெஞ் சுறுதி இருக்கிறப்ப ஏன் ஓடணும் சிஸ் டர்?"

பிலோமினா இருவரையும் மாறி மாறிப் பார்த்தாள்.

"ஏன் ஓடணும் சிஸ்டர்? யார் கிட்டே இருந்து? எதுக்காக?"

பிலோமினா அவன் குரல் உறுதி பெறுவதைக் கவனித்தாள்.

"அவங்க அப்பாகிட்டேயிருந்து இன்னிக்கு ஓடி வந்துட்டா எல்லாம் முடிஞ் சுடுமா சிஸ்டர்?"

ஒரு புதிய கௌதமைப் பார்ப்பது போல் பிலோமினா பார்த்தாள்.

"நாளைக்கு இல்லேன்னா இன்னொரு நாள் இவளோ அவரோ இல்லே இவங்க அம்மாவோ கூட இப்படி ஓடிப் போய்ப் பண்ணிக்கிட்ட கல்யாணத்துக்கு வருத்தப் பட்டா என்ன பிரயோஜனம்?"

நித்யா அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

"இந்த உறவுக்கு ஒரு கௌரவம் இருக்கு சிஸ்டர்! இது ஓடிப் போற கோழைத்தனம் இல்லே. இதுக்குப் போராடணும். பொறுமையா, உறுதியா, ரிதம் பிசகாமல் போராடணும். கடைசியிலே போராட்டம் பயன்படாதுன்னா அந்த ஊர்ல அங்கேயே திருமணம் செய்யணும்..." அவன் ஊகத்திற்கு விடுவது போல் மௌனமானான்.

அவள் என்ன சொல்ல வந்தான் என்று





பிரின்சிபால் (லெக்சரரிடம்): நீங்க ஃபுட்பால் ரசிகரா இருக்கலாம். அதுக்காக சேட்டை செய்யற பையன்களை வெளியே அனுப்பறதுக்கு விசிலை ஊதி 'ரெட் கார்டு' காண்பிக்கிறது கொஞ்சங்கூட நன்னாயில்லை!

— பழனி கல்யாணம்.

அவர்கள் இருவருக்கும் தெளிவாய்ப் புரிந்தது.

"இதுதானா நித்யா உன் தீர்மானமும்?"

பிலோமினா நித்யாவைப் பார்த்துக் கேட்டாள்.

"ஆமாம் சிஸ்டர்!"

"மனப்பூர்வமாகத்தானே?"

எதற்கு இந்த வலியுறுத்தல் என்கிற தோரணையில் நித்யா பிலோமினாவைப் பார்த்தாள்.

"அப்புறம் வருத்தப்படக் கூடாது. அதுக்காகக் கேட்கிறேன்."

"இல்லே சிஸ்டர்... நான் வருத்தப்பட மாட்டேன். எனக்குக் கௌதமைத் தெரியும்."

"இதுக்கு முன்னாடியே நல்லாத் தெரிஞ்சு வச்சிருந்தா இன்னும் நல்லாயிருக்கும். சரி, போகட்டும். வண்டியிலே ஏறு."

நித்யா வண்டியில் ஏறினாள்.

"பிரச்னை இனிமேதான் ஆரம்பிக்கும்!" என்று கௌதமிடம் சொன்னாள் பிலோமினா.

"ஆமாம்... அது ஆரம்பிச்சாதான் முடிவு நல்லபடியா இருக்கும்."

"நான் பொறப்படறேன் கௌதம்!"

"சரி சிஸ்டர்! இந்த உதவியை மறக்க முடியாது" அவன் கைகுவித்தான்.

"நாம எதையும் செய்யறதில்லே. எல்லாம் கர்த்தரின் சித்தப்படி" பிலோமினா சிலுவை தரித்தவாறே சொன்னாள்.

வேன் புறப்பட்டது. வேனில் நித்யாவின் முகம் தெரிந்தது. அதில் ஒரு புதிய ஒளி. என் ஒரு புது மரியாதை! அவனிடமிருந்து இன்னும் கொஞ்சம் கிரகித்துக் கொண்டது போல் ஒரு தெளிவு.

கௌதம் கையாட்டினான்.

நித்யாவும் கையாட்டினாள். இன்னொரு கையும் ஆடியது. பிலோமினா.

**ந**டந்த விஷயத்தை வக்கீலுக்குச் சொல்ல வேண்டும். மரண வாக்குமூலத்தில் அவள் என்ன சொன்னாள் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

அவன் எந்தச் சம்பந்தமும் இன்றி ஆஸ்பத்திரியில் நின்று கொண்டிருப்பதாக உணர்ந்தான்.

இதுவரையிலும் துளசிங்கம் வரவில்லை. ரஞ்சிதத்திற்கு என்னவாயிற்று என்று தெரிந்து கொள்ளச் சிறிது அக்கறை கூடவா அவனுக்கு இல்லாமற் போகும்?

கௌதம் திரும்பி ஐ. ஸி. யூனிட்டைப் பார்த்தான்.

இன்னும் ரஞ்சிதத்தை அப்புறப்படுத்தியிருக்க மாட்டார்கள். உடம்பு சவக்கிடங்குக்குப் போகுமா? செய்தி விட்டலாபுரம் போய், துளசிங்கம் வந்து அதற்குத் தகன ஏற்பாடு செய்வானா? இல்லை, அரசாங்கச் செலவில் அநாதைப் பிணமாக அவள் அடக்கம் செய்யப்படுவாளா?

இனிமேல்தான் தெரியும்.

எதிர்பாராமல் ஒரு சூன்யம் அவனைத் தாக்கிற்று. பொய்யும் மயக்கமும். அவற்றின் தப்பிக்க முடியாத விஷக் கவர்ச்சி. இரைகளைத் தேடும் அவற்றின் கோரப் பசி.

அவன் நெட்டுயிர்த்தான். பாவம் ரஞ்சிதம்! இரையானவள்.

இன்னும் ஆதி சிறையில் இருக்கிறான்.

அவன் மனத்தில் கவிந்த சூன்யத்தை விலக்கினான். ஆதியின் விடுதலை மங்கலட்சுமியின் முகத்தில் ஏற்படுத்த வேண்டிய நிம்மதியின் ஒளியில் அவன் பாதை தெரிகிறது. நடக்கிற வலு பாதத்திற்கு இன்னும் இருக்கிறது. அது முடியுமிடம் வெறுமையோ வேறெதுவோ! நடக்க வேண்டியது. சலியாமல் உறுதியோடு நடக்க வேண்டியதுதான் தனக்கு விதித்த நியதி.

**பி**ன்னாலிருந்து ஒரு புல்லட் ஹார்ன் ஒதுங்கச் சொல்லி ஒலித்தது.

இன்னும் ஒதுங்க இடமில்லை. கௌதம் மேலே நடந்தான்.

மீண்டும் அதே ஒலி.

சற்று ஒதுங்கி நடந்தான்.

மறுபடியும் அந்த ஒலி.

திரும்பினான். இன்ஸ்பெக்டர் இருதயராஜ்..

வண்டியை அவனருகே கொண்டு வந்து நிறுத்தினார் அவர்.

"எங்கே வக்கீல் வீட்டுக்கா?"

இவருக்கு எப்படித் தெரியும்?

வீதியில் அந்த நிமிஷத்தில் அவ்வளவு நடமாட்டமில்லை.

"ஆமாம் ஸார்!"

அவர் அவனை நிதானமாகப் பார்த்துவிட்டுச் சொன்னார்.

"ஆதிக்குப் பெயில் மட்டுமில்லே. அக்வி டென்ஸே கிடைக்கும்."

"எப்படி ஸார்?"

"நேத்து ராத்திரி நான் துளசிங்கத்தை சான்டல்வுட் ரெய்ட்லே பிடிச்சுட்டேன். கையும் களவுமா. இப்போ அவன் லாக்கப்பிலே இருக்கான்."

"அதுக்கும் ஆதியின் விடுதலைக்கும் என்ன தொடர்பு?" என்று கேட்டான் கௌதம்.

"ஆந்திரா பார்டர்ல அவனுடைய சான்டல்வுட் பவுடர் மில்லை 'சீல்' பண்ணிட்டோம். அங்கே ஒரு விட்னஸே கிடைச்சுது."

"என்ன விட்னஸ் ஸார்?"

"வண்டியிலே ஏறு, சொல்றேன்."

இதுவரை கௌதம் அவர் வண்டியில் ஏறியதில்லை. அவன் தயங்கினான்.

"ஹாவ் யூ எனி அப்ஜெக்ஷன்?"

"இல்லே ஸார்!" இனிமேலும் வண்டியில் ஏறாமலிருப்பது கண்ணியமில்லை. ஏறினான்.

புல்லட் நகர்ந்தது. தென்னைமரத் தெரு. வக்கீல் அலுவலகம். அதையும் கடந்தது.

"வக்கீல் ஆபீஸ் அங்கே போயிடுச்சே ஸார்!"

"தெரியும்."

இருதயராஜ் அவனை வேறெங்கோ அழைத்துச் செல்கிறார். போகட்டும். எங்கே வேண்டுமானாலும் போகட்டும். இனி அவனுக்கு ஆட்சேபணையில்லை.

தெரு முனை கடந்து சாலை திரும்பி புல்லட் ஒரு ஹோட்டலோரத்தில் நின்றது.

அவன் இறங்கினான்.

"இந்நேரத்துக்கு இட்லி வடை இருக்காது. தோசை, தயிர்வடைதான். காலையிலே நீ பல் கூடத் தேய்ச்சிருக்க மாட்டியே! சரியா?"

இன்ஸ்பெக்டர் ஆஸ்பத்திரிக்குப் போய்விட்டு வருகிறார் என்று புரிந்து கொண்டான் கௌதம்.

"ஆமாம் சார். இன்னும் பல் தேய்க்கல்லே. நேரம் கெடைக்கல்லே."

அவர் ஹோட்டல் மாடியேறினார். கௌதம் பின் தொடர்ந்தான்.

அவர் ஒரு மேஜையருகில் உட்கார்ந்து பக்கத்து ஸீட்டில் தன் கர்ச்சீப்பைப் போட்டார்.

"நீ போய்ப் பல் தேய்ச்சு மொகம் அலம்பிட்டு வா!"

கௌதம் பாத்ரூம் போய் மூலையில் வைத்திருந்த ஒரு மலிவு விலைப் பல் பொடியில் பல் தேய்த்து முகம் அலம்பி வந்தான்.

"தோசை ஆர்டர் பண்ணியிருக்கேன். வர்ற வரைக்கும் தயிர்வடை சாப்பிடலாமா?"

"வேண்டாம் ஸார்."

அதற்குள் சர்வர் வந்தார்.

"இட்லி இருக்கா?"

"கொஞ்சம் ஆறியிருக்கும் ஸார்."

"ஆறினா இட்லி சாப்பிடுவியா கௌதம்?"

"வேண்டாம் ஸார்."

சர்வர் போய் விட்டார்.

இருதயராஜின் விரல்கள் மேஜை மேல் மெதுவாகத் தாளமிட்டன.

"ஐ ஆம் ஸாரி கௌதம்!" என்றார் திடீரென்று.

"எதுக்கு ஸார்?"

"நீ ஆதிக்காக எந்தப் பயமுமில்லாமே நிறைய ரிஸ்க் எடுத்துக்கிட்டே. உன் நேர்மை எனக்குப் புரிஞ்சுது. ஏன், ஒரு மாதிரி இன்ஸ்பையர் கூட பண்ணிட்டுது. சமயத்திலே மனசைத் தொளைக்கக் கூட செஞ்சுது."

அவன் தலைகுனிந்தான்.

"நான் எந்த ஸ்டெப்பும் எடுக்க முடியலே. நேத்து வரைக்கும்."

அவன் அவரை நிமிர்ந்து பார்த்தான்.

"ஒரு போலீஸ் ஆபீசர் சுதந்திரமானவர் இல்லே கௌதம்."

இன்ஸ்பெக்டரின் விரல்கள் மேஜை மேல் தாளமிடுவதை நிறுத்தின.

"அதெல்லாம் எதுக்கு? நேரடியா விஷயத்துக்கு வர்றேன். ரஞ்சிதத்தின் மரண




— ஆர். பத்மநாபன்.

''ஏன் அந்த ஜோக் எழுத்தாளரைக் கைது பண்ணிட்டாங்களாம்?''
''ஏ. கே. 47 ஜோக்ஸ் நிறைய ஸ்டாக் வச்சிருந்தாராம்!''
— ஆர். ரத்தினசாமி.

வாக்குமூலம் என்ன தெரியுமா?''

''தெரியாது ஸார்!''

''துளசிங்கம்தான் குற்றவாளி. அவனே மாசிலா குடிசைக்கு நெருப்பு வச்சிருக்கான்.''

கௌதம் நிமிர்ந்தான்.

''ஆந்திரா பார்டர்லே ஒரு விட்னஸ் சொன்னேன் இல்லே?''

அவன் தலையசைத்தான்.

''சம்பவம் நடந்த அன்னிக்குச் சாயங்காலம் அவன் காஞ்சிபுரம் பஸ்லே ரஞ்சிதத்தோட ஏறினவன். காஞ்சிபுரம் போகலே... அந்த சாண்டல்வுட் மில்லுக்குத்தான் வந்திருக்கான். அங்கே ஏற்கெனவே இன்னொருத்தி இருந்திருக்கா. அவ மூலம்தான் மாசிலா கொலைக்கு ரஞ்சிதமும் உடந்தைன்னு ப்ரூஃப் கிடைச்சது.''

சர்வர் தோசை கொண்டு வந்தார்..

அவர் வைத்துவிட்டு அகலும் வரை இன்ஸ்பெக்டர் பேச்சை நிறுத்தினார். போனதும் தொடர்ந்தார்.

''மரண வாக்குமூலத்திலே ரஞ்சிதம் எல்லாத்தையும் ஒப்புக்கிட்டிருக்கா. தன்னை இவ்வளவு 'க்ளவரா' ஏமாத்தி இப்படி அவன் உபயோகிச்சுப்பான்னு அவ எதிர்பார்க்கலே. அதனாலதான் 'ஷாக்' தாங்க முடியாமல் பூச்சி மருந்து சாப்பிட்டுட்டா.''

கௌதம் சர்வர் கொண்டு வந்து வைத்த தண்ணீர் தம்ளரை எடுத்து ஒரு வாய் பருகினான்.

''சாப்பிடு கௌதம்.''

அவன் சாப்பிடத் தொடங்கினான்.

இன்ஸ்பெக்டர் பில் கொடுத்தார். வக்கீல் அலுவலகம் நடை தூரத்தில்தான். நடந்தே போய்விடுவதாக விடைபெற்றான் கௌதம்.



**மா**லை நான்கு மணிக்கு வக்கீலும் அவனும் வேலூர் சிறையில் காத்திருந்தனர். ரஞ்சிதத்தின் மரண வாக்குமூலத்திற்கு உடனடிப் பலன். மாஜிஸ்திரேட் ஆதியின் விடுதலைக்கு உத்தரவு பிறப்பித்திருந்தார்.

அவர்கள் ஆதி சிறையிலிருந்து வெளி வருவதற்காகக் காத்திருந்தனர்.

''கங்கிராட்ஸ்'' என்று அவன் தோளைத் தட்டினார் வக்கீல்.

''நான் ஒண்ணுமே செய்யலியே ஸார்!''

''பொறுமையா இருந்தே! உறுதியா இருந்தே.''

''நிரபராதி விடுதலையாயிடுவான். குற்றவாளி தண்டிக்கப்படுவானா?'' என்று கேட்டான் கௌதம்.

''என்னால ஊர்ஜிதமாச் சொல்ல முடியாது.'' என்றார் வக்கீல்.

''துளசிங்கம் ரொம்ப வசதியானவன். சட்டத்தில் எங்கே ஓட்டையிருக்குன்னு அலசிடுவான்.''

''பார்ப்போம்.''

''சட்டம் சில சமயம் மௌனமாயிடுது ஸார்.''

''அது பேசவைக்கிறவனைப் பொறுத்தது. பேசாம நீ 'லா' படியேன்.''

''என்ன ஸார் சொல்றீங்க?''

''உனக்கு அது பொருத்தமானது கௌதம்.''

''தமாஷ் பண்றீங்களா?''

''இல்லே! சீரியஸாச் சொல்றேன்! உங்கிட்டே கமிட்மெண்ட் இருக்கு. உன் வழியிலே உண்மையைத் தேடற உறுதி இருக்கு.''

கௌதம் சிரித்தான்.

''என்னப்பா சிரிக்கிறே... ஐ ஸ்மெல் எ லாயர் விதின் யூ.''

தூரத்தில் ஆதி வந்து கொண்டிருந்தான். அவன் முகத்தில் என்ன பிரகாசம்! அவனுக்கு விடுதலை என்று சொல்லியிருப்பார்கள்.

அந்தப் பிரகாசத்தின் பின்னணியில் அவன் ஊமைத்தாயின் முகம் விட்டலாபுரத்தில் பரவசமாகப் போவது புலப்பட்டது.

இதில் என்ன நிம்மதி...! என்ன திருப்தி...!

ஜிலுசென்று வீசிய சிறுகாற்றில் அவன் முகமும் உடம்பும் குளிர்ந்தன., சிலிர்த்தன. லேசாயின.

கௌதம் ஆதியை நோக்கிக் கையசைத்தான்.

(முற்றிற்று)



# "ஏன் அனுதாபம் எல்லாம் பெண்களின் பக்கம்தான்!"

— சுகாசினி கூறுகிறார்

**"'பெண்' டி. வி. தொடர் மூலம் ஒரு சிறந்த இயக்குனராக நீங்கள் பெயரெடுத்திருக்கிறீர்கள். இந்தப் பணி உங்களுக்கு மகிழ்ச்சி தருவதாக அமைந்திருக்கிறதா?"**

"இந்தத் தொடரை உருவாக்க நான் சந்தோஷமாக வேலை செய்தேன் என்று சொல்ல முடியாது. முக்கியமான காரணம் தவறான பட்ஜெட். சினிமா பட்ஜெட்டுக்குப் பழக்கப்பட்டுப் போன பிறகு ஒரு வாரக் கதையை 1.25 லட்சத்துக்குள் முடிப்பதற்குத் திணறிப் போனேன். மற்ற டி.வி. தொடர்கள் போல் இல்லை இது. ஒன்றிரண்டு லொகேஷன்கள், ஓரிரண்டு ஆர்டிஸ்டுகளோடு வேலை முடியாது. ஒவ்வொரு வாரக் கதைக்கும் வெவ்வேறு நிலைக்களன்; வெவ்வேறு நடிகர்கள்.... எல்லாரிடமும் கால்ஷீட் பெற்று, நேரத்தையும் பணத்தையும் நிர்வகித்து, சமாளிப்பதற்குள் ரொம்ப டென்ஷனாகி விட்டது. சரண்யா மூன்றே நாட்கள்தான் டைம் கொடுத்தார். ஷோபனா நடித்த கதையில் ஒரு பகுதியை படமெடுத்து விட்டு மீதியை முடிப்பதற்கு இரண்டு மாதங்கள் காத்திருக்க வேண்டியதாகி விட்டது. ராதிகாவுக்குத் திடீரென்று உடம்பு சரியில்லாமல் போனதால் இருபது நாட்களுக்கு ஒன்றும் செய்ய முடியவில்லை. சௌகார் ஜானகி அமெரிக்கா செல்லவிருந்ததால் அவர் நடித்த பகுதியைச் சீக்கிரம் முடிக்க வேண்டிய நிர்ப்பந்தம்... இப்படி நடைமுறைப் பிரச்னைகள் ஏராளம். தரமான படைப்பாக இருக்க வேண்டும் என்ற ஆவலில் முன்னணி சினிமா டெக்னீஷியன்களைப் பயன்படுத்திக் கொண்டோம். வீடியோ படமெடுக்கும் போது லைட்டிங்கில் மிகக் கவனமாக இருக்க வேண்டும். HMI lights என்ற ஒரு வகை விளக்குகளைப் பயன்படுத்தினோம். ஒரு விளக்குக்கு 1200 ரூபாய் வாடகை! இரண்டு மூன்று விளக்குகள் ஒவ்வொரு முறையும் தேவைப்படும். இப்படியே செலவு ரொம்ப இழுத்துக் கொண்டு போய் விட்டது. இந்த நிகழ்ச்சியின் தயாரிப்பாளரான என் தந்தைக்கு என்ன லாபம் கிடைத்து விடப்

> "...இந்தத் தொடர் ஆரம்பித்த பிறகு என் வீடு மனோதத்துவ நிபுணரின் கிளினிக் போல் ஆகிவிட்டது..."

போகிறது! இதர டீ.வி. நிகழ்ச்சி தயாரிப்பாளர்கள் என்னைப் பார்த்துச் சிரிக்கிறார்கள். இப்படிப் பிழைக்கத் தெரியாமல் இருக்கிறேனே என்று...."

**"ஆனால் ரசிகர்களிடையே இத் தொடருக்கு நல்ல வரவேற்பு இருந்ததே..."**

"ஆமாம். சில வீடுகளில் பெண்கள் கட்சி, ஆண்கள் கட்சி என்று பிளவுபட்டு ஒவ்வொரு வாரக் கதையையும் விவாதிக்கும் அளவுக்கு ஒரு பாதிப்பை இத் தொடர் ஏற்படுத்தி விட்டது. இவ்வளவு தீவிரமான ஈடுபாட்டையும் பாதிப்பையும் இந்தக் கதைகள் ஏற்படுத்தும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. இன்னும் சொல்லப் போனால் இருபத்திரண்டு நிமிடங்களுக்கு நல்ல பொழுதுபோக்கை அளிக்க வேண்டும் என்பது மட்டும்தான் என் நோக்கமாக இருந்தது. ஆனால், இந்தத் தொடர் ஆரம்பித்த பிறகு என் வீடு கிட்டத்தட்ட மனோதத்துவ நிபுணரின் கிளினிக்கைப் போல் ஆகி விட்டது. தினமும் பெண்கள் எனக்கு ஃபோன் செய்து 'நீங்கள்தான் என் பிரச்னையைப் புரிந்து கொள்ள முடியும்' என்று தங்கள் கதையைச் சொல்லி அழுகிறார்கள். நான் எப்படி இவர்களுக்கு உதவ முடியும்? இந்த வகையான ரியாக்ஷன் ஒரு பக்கம் இருந்தாலும் இன்னொரு பக்கத்தில், 'நீங்கள் உங்கள் கதைகளின் மூலம் என்னதான் கருத்து சொல்ல வர்றீங்க? ஒரு கதையிலயும் 'message' இல்லையே?' என்று கேட்கிற சிலரும் இருக்கிறார்கள்..."



**"'பெண்' என்ற தலைப்பு தரப்பட்டுள்ளதால் பெரிய பிரச்னைகளை — பெண்ணுக்கு எதிரான சமூக அநீதிகளை — நீங்கள் சித்திரிக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு இருந்திருக்கும்."**

"பிரச்னைகளைச் சுட்டிக்காட்டித் தீர்ப்பு வழங்கும் அளவுக்கு எனக்குத் தகுதியிருப்பதாக நான் நினைக்கவில்லை. அன்றாட வாழ்க்கையில் ஏற்படும் சின்னச் சின்ன நிகழ்வுகள்... இந்தச் சந்தர்ப்பங்களில் மனிதர்கள் எப்படி நடந்து கொள்கிறார்கள்... இதை மட்டுமே படம் பிடித்துக் காட்ட விரும்பினேன். ஒவ்வொரு கதையும் பாஸிடிவ் சிந்தனையை உள்ளடக்கி இருக்க வேண்டும் என்ற கட்டுப்பாட்டை மட்டும்தான் விதித்துக் கொண்டேன். எனக்கு நெஞ்சை அழுத்தும் 'நெகடிவ்' முடிவுகள் பிடிக்காது. ஆனால் என்னையும் மீறி, நான்கு கதைகளில் பிரச்னைகளைத் தொட்டுத்தான் இருக்கிறேன். அந்தப் பிரச்னைகள்; விவாகரத்து, விதவைகள் நிலை, wife beating, இரண்டு பேருக்கிடையே நிலவும் தொடர்பின்மை — communication gap. ரேவதி நடித்த முதல்





வாரக் கதையில் அம்மாவுக்கும் பெண்ணுக்கும் இடையே உள்ள அன்பு வெளிப்படாமல் **communication gap** தடையாக இருப்பதாகக் காட்டியிருந்தேன். ஆனால், அந்தக் கதை, ஆண் குழந்தை வேண்டும் என்று விரும்பிய தாய், இரண்டாவதும் பெண்ணாகப் பிறந்ததால் அந்தக் குழந்தை மேல் வெறுப்பைக் காட்டுவதாக அர்த்தம் செய்து கொள்ளப்பட்டது!''

**''அவ்வாறு அர்த்தமாகும் தொனியில் அதில் வசனங்கள் இருந்தனவே?''**

''அந்த வசனங்கள் ஒரு சராசரி மத்திய தர வகுப்புத் தாய் தன் மகளிடம் பேசுப் பேச்சுத்தான்... எப்படியோ அந்தக் கதையின் நோக்கத்தைச் சிலர் தவறாகப் புரிந்து கொண்டு விட்டார்கள்... கடைசி வாரத்தில் தான் ஒரு சிக்கலான பிரச்னையைத் தொட எண்ணி, பிறகு அதை கைவிட்டு விட்டேன்...''

**''அது என்ன பிரச்னை?''**

''வேலைக்குப் போகும் ஒரு மத்தியதர வகுப்புப் பெண். அலுவலகம் செல்லும் வழியில் ஒருவன் அவளிடம் அசடு வழிகிறான். அவள் கோபத்தில் அவனைத் திட்டிவிட, அவன் சொல்லடிபட்ட அவமானத்தில் அவளை வேறு ஒரு சந்தர்ப்பத்தில் வழிமறித்துக் கெடுக்க முயற்சி செய்கிறான். அவள் தப்பி ஓடி வந்து தன் வீட்டினரிடம் நடந்ததைச் சொல்கிறாள். அவள் அம்மா தலையில் தண்ணீர் கொட்டிக் கொள்ளச் சொல்கிறாள். அவள் அண்ணாவோ 'அவன் மட்டும் உன்னைக் கெடுத்திருந்தால் அவன் எங்கிருந்தாலும் தேடிப் பிடித்து வந்து உனக்குத் தாலி கட்ட வைச்சிருப்பேன்' என்கிறான். இந்தக் கட்டத்தில் அப்பெண் மிகவும் கோபப்பட்டுப் பேசுகிறாள். தன்னைக் கற்பழித்தவன் என்ற ஒரே 'தகுதி'க்காக அவனைக் கல்யாணம் செய்து கொள்வது அபத்தம் என்று வாதாடுகிறாள். போலீஸ் ஸ்டேஷன் சென்று அதிகாரிகளிடம் தான் புகார் கொடுக்க விரும்புவதாகச் சொல்கிறாள். வழக்கமான அபத்த சித்திரிப்பாக இல்லாமல் போலீஸ் அதிகாரிகள் மனித நேயமுள்ளவர்களாக இருக்கிறார்கள். வழக்காடு மன்றத்தில் அப் பெண்

* வண்ணப்படம்: சுபா

**''...பிரச்னைகளைச் சுட்டிக் காட்டித் தீர்ப்பு வழங்கும் அளவுக்கு எனக்குத் தகுதியிருப்பதாக நான் நினைக்கவில்லை...''**

எத்தகைய விசாரணைக்கு உள்ளாவாள் என்பதை எடுத்துச் சொல்கிறார்கள். இருப்பினும் அப் பெண் தன் நிலையில் உறுதியாக இருந்து, புகார் எழுதிக் கொடுக்கிறாள் என்பதே கதை. என்ன இருந்தாலும் டி.வி. drawing room audienceக்கான சாதனம் என்பதால் இந்தக் கதையைக் கைவிட்டு விட்டேன். சின்னக் குழந்தைகள் கூட பார்ப்பார்கள். ஒரு ஆண் ஒரு பெண்ணை எவ்வளவு தூரம் புண்படுத்த முடியும் என்பதையெல்லாம் அவர்களுக்குச் சொல்லத் தேவையில்லை என்று தோன்றியது....''

''உங்கள் கடைசிக் கதையே — 'வார்த்தை தவறி விட்டாய்' — drawing room audienceக்கு ஏற்ற வகையில் சித்திரிக்கப்படவில்லை என்ற குற்றச்சாட்டு இருக்கிறது...''

''ஒலியும் ஒளியும் நிகழ்ச்சிகளையெல்லாம் drawing roomஇல் நாம் பார்க்கிறோமே! குழந்தைகளை அதைப் பார்க்க அனுமதிக்கிறோமே! 'வார்த்தை தவறி விட்டாய்' கதையில் பாதுகாப்பு உணர்வு கொஞ்சமும் அற்ற ஓர் ஆணும் பெண்ணும் மண வாழ்க்கையைத் தொடங்குகிறார்கள். மெள்ள மெள்ள அந்த உணர்வை ஒருவருக்கொருவர் அளித்துக் கொள்கிறார்கள். இந்தக் கதையை இயல்பாகச் சித்திரித்திருந்தேன். இதில் கணவன் தன் மனைவியை ஒரு குழந்தை போல் நேசித்து, அன்பு செலுத்துகிறான். கன்னத்திலும் நெற்றியிலும் முத்தமிடுவது இந்த மென்மையான உணர்வின் வெளிப்பாடே! இந்தக் காட்சிகளைப் பார்த்து நம் குழந்தைகள் கெட்டுப் போய் விட மாட்டார்கள். I think it is time we prepared our children.... ஆரோக்கியமான உறவுகள் பற்றி அவர்கள் தெரிந்து கொள்ளணும்.''

''Positive ஆக இருக்க விரும்புகிறேன் என்று கூறினீர்கள். இந்தக் கதையை இவ்வளவு சோகமாக முடித்திருக்கிறீர்கள். தொடரே ஒரு சோகச் சுமையில் முடிந்திருக்கிறது.''

''இந்தக் கதைக்கு inspiration ஒரு சத்யஜித் ரே படம். இதை வேறு எப்படி முடிப்பது என்று தெரியவில்லை. 'கர்ப்பம் தரிக்கக் கூடாது' என்பதுதான் இக் கதை உணர்த்தும் பாடமா?' என்று சிலர் என்னைக் கேட்டார்கள். 'பிரசவத்துக்காகக் கிராமத்துக்குப் போகாதீர்கள் என்பதே பாடம்' என்று பதில் சொன்னேன். ஆனால் பாடம் சொல்வதற்காக இந்தப் படத்தை எடுக்கவில்லை. அது ஒரு கதை. அவ்வளவுதான்.''

''மற்றொரு கதையின் முடிவில் கணவனை இழந்த ராதிகாவுக்குக் கோயில் குருக்கள் குங்குமம் கொடுப்பதாக ஓர் இறுதிக் காட்சி. இந்தக் காட்சி, கதை முடிந்த பிறகு வேண்டுமென்றே சேர்க்கப்பட்டது போல் தோன்றியது...''

''ராதிகா கதாபாத்திரத்தின் பிரச்னைகள் தீர்வதோடு கதை முடிந்து விடுவது உண்மைதான். ஆனால் அந்தக் கதையெல்லாம் கொஞ்சம் மிகைப்படுத்தப்பட்ட சினிமா பாணி நிகழ்ச்சிகள் — பிற்சேர்க்கை என்பதாக நீங்கள் கருதும் அந்தக் கடைசி நிகழ்ச்சிதான் உண்மை! அந்த அனுபவம் எழுத்தாளர் சிவசங்கரிக்கு நிஜமாகவே ஏற்பட்டதாக அவர் அளித்த பேட்டி ஒன்றில் படித்தேன். அதனால்தான் கதை முடிந்தாலும் பரவாயில்லை என்று அதைச் சேர்த்தேன். 'இதை என்னோட நிறுத்திடாதீங்க' என்று ராதிகா கோயில் குருக்களிடம் சொல்வதும் சிவசங்கரி, தமக்கு அந்த அனுபவம் நேர்ந்த போது சொன்ன வார்த்தைகள்தான். அவர் அனுமதியின்றியே அந்த நிகழ்ச்சியைப் பயன்படுத்திக் கொண்டேன். அவரை அழைத்துப் படத்தைப் போட்டுக் காண்பித்தேன். அவர் ஆட்சேபிக்கவில்லை.''

''நிறைய முற்போக்குச் சிந்தனைகள் இத் தொடரில் வெளிப்பட்டன. ஆனால் ஒரு கதையில், கணவன் மற்றொரு பெண்ணுடன் வாழ்கிறான் என்று தெரிந்ததும் பிறந்த வீட்டுக்குத் திரும்பி வரும் பெண்ணை அவள் தந்தை மீண்டும் அவனுடன் சேர்த்து வைக்க முயற்சிகள் எடுக்கிறார். கணவன் திருமண பந்தத்தை மதிக்காமல் நடந்து கொள்ளும்போதே அந்த உறவு முறிந்து விடாதா? பிறகு சேர்த்து வைக்கும் முயற்சி ஒன்று தேவையா?''

''அறிவுபூர்வமாகத் தர்க்கம் செய்தால் அந்த முயற்சியே தேவையில்லை என்று சொல்லலாம். ஆனால் அத்தகைய சந்தர்ப்பத்தில் பெண்ணின் மண வாழ்க்கை காப்பாற்றப்பட வேண்டும் என்றுதான் ஒவ்வொரு தந்தையும் விரும்புவார்; முயற்சி செய்வார். அந்த மனித இயல்பைச் சித்திரிக்கத்தான் முயற்சி செய்தேன். இறுதியில் 'அப்பா இருக்கேன்மா!' என்று பெண்ணுக்குத் தைரியமூட்டுகிறாரே. அவளைக் கட்டாயப்படுத்தித் திருப்பியனுப்பவில்லையே.''

''பாதிக்கப்பட்ட பெண்களைப் பற்றியே எல்லா கதைகளும் அமைந்திருந்தன. ஒரு பெண்ணினால் ஓர் ஆணின் வாழ்க்கை

''நீங்க அவசியம் வேற கட்சிக்குப் போய்த்தான் ஆகணுமா...? வேணும்னா நம்ம கட்சியிலேயே புதுசா ஒரு கோஷ்டி ஆரம்பிச்சுடுங்களேன்!''

— ஞா. ஞானமுத்து.



# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...




ஒரு போஸ்ட் கார்டு உங்களது வாழ்க்கையில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறது என்று நாங்கள் சொன்னால் உங்களுக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது தான்!.

★ ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கமின்றி சரளமாகப் பேச...

★ இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற...

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.

*"நேர்முகப் பயிற்சியும் உண்டு"*

மேலும் தகவல் அறிய ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதி எங்களுக்கு அனுப்பினால் போதும்!

பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

***உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி இன்றே துவங்கட்டும்!***

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி:

## விவேகானந்தா கல்வி நிலையம்

**தபால் பெட்டி எண்: 4986, 9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17.**

# அதிர்ஷ்ட தேவதை

"ஒண்ணும் வேணாம்மா."

"சரி, இப்ப வந்த விஷயத்தைச் சொல்லு..."

"என் புருசன் என்கூட இருக்க மாட்டேன்னு சொல்லி ஊட்டை வுட்டு இங்கே வந்துட்டாரும்மா."

"இங்கேதான் வந்தான்னு யார் உன்கிட்ட சொன்னா?"

"என் அப்பன்காரன் இன்னிக்கு இங்கே வந்தாரு. ஊட்டுக்கு வரச் சொன்னாரு. என் புருசன் அவர்கிட்டே வர முடியாதுன்னு சொல்லிட்டானா...? என் அப்பா இதை என் கையிலே சொன்னாரு... அதான் நான் ஓடியாந்தேன்."

"சரி, புரியறது. ரங்கன் பண்ணினது தப்புத்தான். ஏன் அப்படிச் செய்ஞ்சான்னு நான் விசாரிக்கிறேன். ரங்கா, ரங்கா இங்கே வா, ரமணி, நீ அங்கேயே இரு," என்றாள் கோமதி.

ரங்கன் தயங்கித் தயங்கி உள்ளே வந்து, கோமதியின் எதிரே நின்றான்.

"ஏண்டா, உன் பெண்டாட்டி சொல்றதெல்லாம் உண்மையா?"

'தைரியமாயிரு' என்று ரமணி ஏற்கெனவே கூறியிருந்த அறிவுரை இப்போது ஞாபகத்துக்கு வர, "நான் ஓடி வரலே, நீ தனியா இரு. மாசா மாசம் செலவுக்குப் பணம் அனுப்பறேன்னு சொல்லிட்டுத் தான் வந்தேன்" என்றான் ரங்கன்.

கோமதி சிரித்தாள்.

"ஏண்டா ரங்கா, இவ உன் பெண்டாட்டி தானே? அவளோட குடும்பம் நடத்தாம மாசா மாசம் பணம் அனுப்பிச்சிட்டிருந்தா உன் கடமை முடிஞ்சிடுமா?"

ரங்கன் பதில் சொல்ல முடியாமல் திணறினான்.

"அப்படிக் கேளுங்கம்மா... மாசா மாசம் பணம் வாங்கிக்கத்தானா நான் இவரைக் கட்டிக்கிட்டேன்?"

"ரங்கா நீ இப்ப என்ன செய்யறே, உன் பெட்டியை அழைத்துக்கிட்டு உன் வீட்டுக்கே போறே... மூணு நாலு மாசம் கழிச்சு நீங்க ரெண்டு பேரும் மறுபடியும் இங்கே வர்றப்ப, இவ பிள்ளைத்தாய்ச்சியா இருக்கணும்."

"நீங்க மகாலட்சுமி மாதிரி இருக்கீங்கம்மா... ஒங்களாலதான் எனக்கு விடியப் போவுது வாய்யா, போலாம்."

"அம்மா, நான் இந்த வீட்ல இருக்கக் கூடாதுன்னு சொல்லுங்க, நான் இப்பவே போயிடறேன். ஆனா அவளோட நான் போக மாட்டேன். என் லாட்டரிப் பணம் என் கைக்கு வந்த மறுநாளே இவ அப்பனும் இவளுமாச் சேர்ந்து கொன்னுடுவாங்க!"

"என்னடா ரங்கா உளர்றே? ஒரு பெண்டாட்டி தன் புருஷனைக் கொலையா செய்வா...? நீ அரண்டு போயிருக்கே."

"இல்லேம்மா, இவ அப்பன் மோசம் செய்ஞ்சு, இவளைக் காட்டி மயக்கிக் கட்டி வைச்சான். லாட்டரிப் பணத்திலே அவருக்கும் பங்கு தரணுமாம். தராட்டி ஆளை வைச்சுக் கொன்னு சமுத்திரத்திலே போட்டுடுவேன்னான். எனக்கு ஏதாச்சும் திடீர்னு ஆயிட்டா, எல்லாப் பணமும் பெண்டாட்டிக்குத்தான் வரும்னு இவளே சொன்னா... என்கூட சந்தோஷமா வாழணும்னு இவளுக்குத் தோணியிருந்தா அப்படிப் பேசியிருப்பாளா, அம்மா?"

"ஏம்மா, தனம், நீ இப்படிச் சொன்னியா...?"

"தப்புத்தாம்மா... காரு வேணும், புச்சா ஊடு வேணும், நகை, புடைவை அல்லாம் வேணும்னு சொல்லியிருக்கேம்மா. இவரு என் புருசரு. இவர் உசிரோட இருந்தாத் தானேம்மா நான் பூவும் பொட்டுமா வாழ முடியும்?"

"சரியாச் சொன்னே, தனம்!" என்ற கோமதி, "ஏண்டா, ரங்கா, லாட்டரிப் பணம் எப்பக் கையிலே கிடைக்கும்?" என்று கேட்டாள்.

"ஒண்ணு ரெண்டு மாசம் ஆகும்னு சொன்னாங்க."

கோமதி தனத்தைப் பார்த்தாள்.

"தனம், இந்த ரங்கனுக்கு இன்னும் பணம் கையிலே கிடைக்கலே. இப்ப வேலையும் போயிட்டுது. பணம் வர்ற வரைக்கும் என்ன செய்வீங்க...? பாங்க்லே கடன் தரலாம்... அதில் குடித்தனம் நடத்துவீங்களா?"

"நீங்க இருக்கிற வரைக்கும் எனக்குக் கவலையே இல்லேம்மா."

"அப்ப நான் சொல்றதைக் கேப்பியா? கேக்கிறதானா சொல்றேன்."

"சொல்லுங்கம்மா. நீங்க என்ன சொன்னாலும் அது நல்லதுக்காகத்தான் இருக்



"என் பேரைச் சொல்லி என் சினேகிதன் கிட்டே யாரோ ஒருத்தன் இருநூறு ரூபாய் வாங்கிட்டுப் போயிட்டான்!"

"ஆச்சரியமா இருக்கே. உங்க பேரைச் சொன்ன பிறகுமா அவர் பணம் கொடுத்தார்?"

— ஆர். ஆர். பூபதி

கும்மா!"

"மாரியம்மன் மேலே ஆணையாக் கேட்பேன்னு சொல்லு."

"மாரியம்மன் மேல ஆணையாக் கேப்பேன்."

"பணம் இன்னும் ரெண்டு மாசத்திலே வந்துடும். அதுவரையில் நீ உன் வீட்லயே இரு. இவனை நான் பார்த்துக்கறேன். நீ வேணும்னா அடிக்கடி வந்து பார்த்துட்டுப் போ. உன் செலவுக்கு மாசாமாசம் ஐந்நூறோ அறுநூறோ நானே அனுப்பி வைக்கிறேன்... ஆனா இப்ப அவன் அங்க வர வேண்டாம். ஏன்னா, அவன் உன் அப்பனைக் கண்டு பயப்படறான்."

"எனக்கும் என் அப்பனைக் கண்டா பயமாத்தான் இருக்கும்மா..."

"அதான் சொல்றேன். இவன் இங்கே இருக்கட்டும்னு. நீ இவனோட பெண்டாட்டி. இவன்கிட்ட உனக்கு இருக்கிற உரிமை உன் அப்பனுக்கோ, இவனோட சொந்தக்காரங்களுக்கோ இல்லை. அவங்ககிட்டேர்ந்து உன் புருசனை மொதல்ல காப்பாத்தணும்."

"இவரு உயிருக்கு ஆபத்துன்னு நீங்களும் சொல்றீங்களா, அம்மா?"

"சந்தேகம் என்ன தனம்? ரங்கனுக்கு லட்சம் லட்சமாப் பணம் வரப் போறது. அதை நீங்க ரெண்டு பேருமாச் சந்தோஷமா அனுபவிக்கணும் இல்லையா? நானே அஞ்சாறு லட்சத்துக்கு ஒரு பங்களா வாங்க ஏற்பாடு செய்யறேன். நல்லி, குமரன் கடைக்கெல்லாம் அழைச்சுக்கிட்டுப் போய் உனக்குப் பட்டுப்புடைவையெல்லாம் செலக்ட் பண்றேன். உன் இஷ்டத்துக்கு நகை வாங்க உம்மிடியார், பாபலால் கடைகளுக்கெல்லாம் அழைச்சுக்கிட்டுப் போறேன்..."

"காரு?" தனம வெகுளியாய்க் கேட்டாள்.

"ஓ, காரை மறந்துட்டேன் இல்லே... அம்பாசிடர்... பியட், மாருதின்னு காரெல்லாம் இருக்கு. இப்ப எல்லோரும் மாருதி, மாருதின்னு ஓடறாங்க. பணம் கைக்கு வந்ததும் அதையும் வாங்கிடலாம். அதுக்கு முன்னாடி ரங்கன் கார் ஓட்டக் கத்துக்கட்டும்."

"ரெண்டு மாசத்துக்கு அப்பாலே லாட்டரிப் பணம் இவரு கைக்கு வந்தவுடனே இவரை அனுப்பிச்சுடுவீங்களா, அம்மா?"

"மாட்டேன்."

"என்னம்மா நீங்க? பால் மாத்றீங்க? இப்பத்தானே சொன்னீங்க...?"

"நீ அவசரப்படறே தனம். இவனை உன் வீட்டுக்கு அனுப்ப மாட்டேன். நீ இவனோட புது வீட்டுக்குக் குடிவருவே! நானே வந்து உன்னை அழைச்சு இவன் கையிலே ஒப்படைப்பேன்! போதுமா?"

"நிசமாலுமா?"

"சத்தியம் பண்ணித் தரணுமா?"

"வேணாம்மா."

"சரி, நீ இப்பப் புறப்படு. மணி ஒன்பது அடிச்சாயிடுத்து."

"சரிம்மா."

"குங்குமம் வாங்கிக்கிட்டுப் போ!"

"நீங்க என்னைப் பெத்த அம்மா மாதிரி இருக்கீங்க... உங்க புள்ளைதான் ராங் பண்ணிக்கிட்டே இருக்காரு...!"

"இனிமே ராங் பண்ணவே மாட்டான்!" சொன்னவள், "ரமணி!" என்று அழைத்தாள்.

"டேய், மணி ஒம்பது அடிச்சாச்சு. இவ இங்கேருந்து பஸ் ஸ்டாண்டுக்குத் தனியாப் போகக் கூடாது. அவளை பஸ் ஸ்டாண்டிலே விட்டுட்டு வா... அவ பஸ்லே ஏர்ற வரைக்கும் காத்திரு. ரங்கா நீயும் ரமணி கூடப் போ!"

சொல்லிவிட்டுக் கோமதி குங்குமத்தை நீட்ட, தனம் ஆள் காட்டி விரலால் எடுத்து, அம்பது பைசா நாணய அளவில் இருக்கும் நெற்றிப் பொட்டின் மீது இட்டுக் கொண்டாள்.

இரவு வீட்டை அடைந்த போது பத்துக்கு மேலாகிவிட்டது. தனம் கனவுலகில் மிதந்து கொண்டே வீட்டினுள் பிரவேசித்தாள்.

"கய்தே, நீ தனியாவா வந்தே?" என்று வரவேற்ற மயில்சாமி, அவள் எதிரே கண்கள் சிவக்க நின்றான். சாராய நெடி அறையெல்லாம் வீசியது.

"ஆமாய்யா, நான் தனியாத்தான் வந்தேன். என் புருசன் வந்தா அந்த ஆளை நீ

வெட்டிப் போட்டுடுவியே? அவரைக் காப் பாத்த வேணாம்? அதான் அவரை அங்கேயே வுட்டுட்டுத் தனியா வந்தேன்!''

''என்னடி காது குத்தறே?''

''யோவ், நீ அப்பன்காரன்னு கூடப் பார்க்க மாட்டேன்...''

''இன்னா செய்வே?''

''வம்பு தும்பு பண்ணாம இருந்தே, பணம் வந்ததும் உன் கையிலே ஐயாயிரமோ, ஏழாயிரமோ குடுப்பேன்...என் புருசனை அடிச்சே உதைச்சே, நானே பூக்கடை போலீஸ் ஸ்டேசனுக்குப் பூடுவேன். ஹங், ஹாங்.''

ஒரு நீண்ட நிமிடத்துக்கு மௌனமாய் நின்ற மயில்சாமி யோசித்தான். ரமணி கெட்டிக்காரன். வார்த்தைகளால் இவளை மயக்கி அனுப்பியிருக்கிறான்.

''நான் உங்கிட்ட கத்தினது தப்புத்தான் கண்ணு. ஏன் என் மருமகப் புள்ளை வரல்லே?'' நான் மருமகப் புள்ளையைக் கொல்லுவேன்னு நீ கூட நம்பறியா? இம்மாம் பணம் வந்திருக்கிறப்ப அவனைக் கொன்னுட்டா நான் மட்டுமா மாட்டிப் பேன்? நீயுமில்ல ஜெயிலுக்குப் போவே? அப்பால அந்தப் பணத்தை நீயும் நானும் கண்ணால பார்ப்பமா?''

''சரி நயினா. நீ கொல்ல மாட்டே. நீ இப்ப இங்கேர்ந்து போயிடு... பணம் கைக்கு வர ரெண்டு மாசம் ஆகும்னாங்க... அப்பாலே நான் புச்சா ஒரு ஊட்டுக்குப் பூடுவேன்... நீ அப்ப அங்கே வந்து பாரு. எதனாச்சியும் தர்றேன்!''

''புச்சா வீடா? யார் கட்டித் தர்றாங்களாம்?''

''அஞ்சாறு லட்சத்திலே ஒரு ஊடு வெலைக்கு வர்றதாம்.''

''யார், அந்த ரமணிக் கழுதை சொல்லிச்சா?''

''இல்லை... அந்த ஆளு இப்ப ஒதுங்கி நின்னுட்டான்... என் கையில இனிமே ராங் பண்ண மாட்டான்னு அவனோட அம்மாவே சொல்லிச்சு... நல்ல அம்மா, மகாலட்சுமி கணக்கா இருக்காங்க... என்னை அவங்களே அளைச்சுக்கிட்டுப் போய், நகை, பட்டுப் புடைவை அல்லாம் வாங்கித் தர்றேன்னு சொன்னாங்க. ஒரு கார் கூட வாங்கப் போறேன். அதுக்குள்ளாற என் புருசன் கார் ஓட்டக் கத்துக்கிடுவாரு.''

''அப்ப மருமகப் புள்ளே இப்போதைக்கு வர மாட்டான்னு சொல்லு. பணம் வர்ற வரைக்கும் நீ சோத்துக்கு என்ன செய்வே பொண்ணு?''

''அத்தைப் பத்தி ஒனக்கென்ன? மாசாமாசம் டாண்ணு பணம் இங்கே வந்து நிக்கும்... அல்லாம் ரெண்டு மாசம் தானே?''




குழந்தைகளுக்கிடையே இடைவெளி வேண்டும் என்ற சிம்பாப்வே அரசின் திட்டத்தை ஆதரித்துப் பேசினார் அந்நாட்டுப் பெண் எம். பி. மார்கரெட் டோங்கோ. அத்திட்டத்தின் வெற்றியை, ஓர் ஆண் பல பெண்களை மணப்பதை அரசு ஆதரிப்பதானது எவ்வாறு பாதிக்கிறதென்று எடுத்துக்காட்டினார். 24 பெண்களை மணந்து (இதில் ஐவர் தற்பொழுது கர்ப்பவதிகள்) 136 குழந்தைகளைப் பெற்றுள்ள ஓர் ஆணைப் பற்றிய நாளிதழ்ச் செய்தியைக் குறிப்பிட்டு, ஆண்கள் பல தாரங்களைத் திருமணம் செய்து கொள்வதைக் கட்டுப்படுத்தச் சட்டம் இயற்ற வேண்டுமென்று அவர் வினாவிய போது, அவையில் அதிகச் சிரிப்பும் கேலிக் கூச்சல்களும் ஆண் எம். பிக்கள் பகுதியிலிருந்து எழுந்தன.

தகவல்: அ. சிங்காரவேலு.
ஆதாரம்: 'இந்து'

''உன் தலையிலே அவங்க நல்லா மௌளகா அரைச்சுட்டாங்க, தனம்! நீ ஒரு அறிவுகெட்ட பொண்ணு! மினுக்கிக்கிட்டு ஊர் சுத்தத்தான் தெரியும்!''

''யோவ், இன்னா சொன்னே?''

''பின்னே என்னடி? இந்த ரெண்டு மாசத்திலே என்னென்னவெல்லாம் நடக்குமோ...? ரெண்டு மாசத்துக்கு உன் வாயை அடைச்சு வைச்சுட்டாங்க. உன் புருசன் ஒரு ஏமாளி... ரமணி சொல்றதுதான் சரிம்பான். அவன் சொல்ற இடத்திலெல்லாம் கையெழுத்துப் போடுவான். இப்பச் சொல்றேன் பாரு, நீ இந்தத் தெரு முழுக்க, கோவிந்தா, கோவிந்தான்னு கத்திக்கிட்டு அலையப் போறே!''

''யோவ், நீ அந்த அம்மாவைப் பத்தி எதுனாச்சியும் பேசினே. ஒன் வாய் வெந்து பூடும். ஜூஸ் குடிக்கிறியான்னு கேட்டாங்க. நான் பொறப்படறப்ப குங்குமம் கொடுத்தாங்க... அந்த ஆளையும் என் புருசனையும் பஸ் ஸ்டாண்டுக்குத் தொணையா அனுப்பிச்சாங்க.''

''எனக்கு இவ்வளவு நல்ல அம்மாவைப் பார்க்கணும் போல இருக்கு. நாளைக்கே போறேன். எனக்கு விபூதி குடுப்பாங்க!'' என்றான் மயில்சாமி.

''யோவ் அங்கே போனே, நான் சும்மா இருக்கமாட்டேன்...என் புதுவூட்டுவாசப்படி மிதிக்க விடமாட்டேன். என் கார்ல ஏறவிட மாட்டேன். சும்மாக் கெட... ஹங் ஹாங், சொல்லிட்டேன்.''

(தொடரும்)



* பரிமாறும் கரண்டி கூடத் தூய்மையாய் இருக்க வேண்டும்.

# ஐஸ்க்ரீம்: ரூ.400 கோடி வியாபாரம்!

**வி**தவிதமான நிறங்களில் எட்டு அடுக்கு ஐஸ்கிரீம். ஒவ்வொன்றும் ஒவ்வொரு சுவை. ஓர் உயரமான கண்ணாடி டம்ளரில் இட்டு, அலங்காரத் தோற்றத்துடன் இதைப் பரிமாறுகிறார்கள். 'Earthquake' என்ற பெயர் வழங்கும் இந்த ஐஸ்கிரீமின் விலை 125 ரூபாய்! பொருத்தமான பெயர்தான்! விலையைக் கேட்டால் மனத்துக்குள் பூகம்பம் ஏற்படுகிறது. சாப்பிட்டால் வயிற்றுக்குள் பூகம்பம் வந்து விடுமோ?

''இல்லவே இல்லை!'' என்று மறுக்கிறார் Earthquake ஐஸ்கிரீம் தயாரித்து விற்கும் தால பிரகாஷ் நிறுவனத்தின் உரிமையாளர்களுள் ஒருவரான சீதாராம ராவ். ''இந்தத் தயாரிப்புக்கு நாங்கள் எதிர்பார்த்ததை விட அதிகமாகவே வரவேற்பு இருக்கிறது'' என்கிறார்.

குளுகுளு அறையில் அலங்காரச் சூழலில் அமர்ந்து பணத்தைப் பற்றிய கவலையின்றி earthquake சுவைப்பவர்களானாலும்; சம்பளம் வாங்கிய அன்றைக்கு மட்டும் குடும்பத்தோடு தெருமுனை ஐஸ்கிரீம் கடைக்குப் போய் நாற்பது — ஐம்பது ரூபாய்க்கு ஐஸ்கிரீம் வாங்கிக் கொடுப்பவர்களானாலும் ஐம்பது பைசா 'குச்சி ஐஸ்' வாங்கிச் சுவைக்கும் ஏழைப் பள்ளிச் சிறுவர்களானாலும் எல்லோர் முகத்திலும் தவழ்வது ஒரே ரகமான சந்தோஷம்தான்!

இந்த ஐஸ்கிரீம் மோகம் இன்று நேற்று ஏற்பட்டதல்ல. அந்தக் கால எகிப்தியர்களும், பாபிலோனியர்களும் உறைய வைத்த இனிப்புப் பண்டங்களை உண்டதாகவும், கி. மு. முதல் நூற்றாண்டில் ரோமானிய மன்னன் நீரோவின் அரண்மனையில் பழச்



• சீதாராமராவ்



• அதிநவீன ஐஸ்கிரீம் தொழிற்சாலை.

சாறு, மது வகைகளை உறைபனியில் குளிர வைத்துக் குடித்ததாகவும் ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்திருக்கின்றார்கள். மார்க்கோ போலோவின் பயணக் குறிப்புகளில் கிழக்கிந்தியாவில் சுவைத்த 'இனிய, மணமூட்டப்பட்ட, குளிர்ந்த உணவு வகை' பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. பதினெட்டாம் நூற்றாண்டில், அமெரிக்காவின் இத்தாலிய குடியிருப்புப் பகுதிகளில் ஐஸ்கிரீம் அறிமுகமானபோதிலும் 1851 இல்தான் பால்டிமோர் நகரில் ஐஸ்கிரீம் தொழிற்சாலை நிறுவப்பட்டது.

**ப**ழைய சரித்திரம் இருக்கட்டும்... இன்றைக்கு நம் ஊரில் அதிகமாக விற்பனையாகும் ஐஸ்கிரீம்...? 1989 ஆம் ஆண்டின் IMRB ஆய்வுப்படி முதல் இடத்தைப் பெறுவது 'அருண்' ஐஸ்கிரீம்! தமிழ் நாட்டு ஐஸ்கிரீம் சந்தையில் 26 சதவிகிதம் இவர்கள் கட்டுப்பாட்டில்! அருண் ஐஸ்கிரீம் தொழிற்சாலையில் இயந்திரங்களின் ஆட்சி. அவற்றின் ரீங்காரத்தோடு பால், எஸன்ஸ், நெய்யில், வறுபடும் முந்திரி இவற்றின் இனிய நறுமணம்... பொன்னேரி, பெரியபாளையம் போன்ற இடங்களிலிருந்து ஐஸ்கிரீம் தயாரிப்புக்குப் பால் வருகிறது. மிஷின் மிஷினாக ஏறி இறங்கி, பல சேர்க்கைகளை ஏற்றுக் கொண்டு ஐஸ்கிரீமாக உருமாறுகிறது.

''உலர்ந்த ஐஸில் வைத்துப் 'பாக்' செய்து அனுப்பப்படும் எங்கள் ஐஸ்கிரீம்கள் பதினெட்டு மணி நேரம் வரை உருகாமல் இருக்கும்'' என்றார் அருண் ஐஸ்கிரீம் நிறுவனப் பொது மேலாளர் காசிராஜன்.

**இ**ந்த வருட இறுதிக்குள் இந்திய ஐஸ்கிரீம் மார்க்கெட் ரூ 400 கோடியைத் தொடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது! இதற்குக் காரணம், பணப் புழக்கமும் வெளியில் சென்று சாப்பிடும் பழக்கமும் அதிகரித்துள்ளதுதான். போதாக்குறைக்குக் கலர் டி.வி.யில் சுண்டியிழுக்கும் ஐஸ்கிரீம் விளம்பரங்கள். ஏற்கெனவே ஐஸ்கிரீம் தொழிலில் இருந்தவர்கள் தவிர புதியவர்கள் கூடத் தைரியமாக இந்தச் சந்தைக்குள் நுழைகிறார்கள். சாக்லேட்டுக்குப் பெயர் போன காட்பரீஸ் நிறுவனத்தின் 'டாலப்ஸ்' ஐஸ்கிரீம் கடைகள், சென்னை நகரின் ஒவ்வொரு வட்டாரத்திலும் இருக்கின்றன. ஒரே வட்டாரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட டாலப்ஸ் கடைகளும் உண்டு! ஒரு டாலப்ஸ் டீலரிடம் கேட்ட போது இது குறித்து வருத்தம் தெரிவித்தார். ''சென்னை நகருக்கு மொத்த விற்பனை உரிமையைப் பெற்றுக் கொண்டு அதனைப் பலருக்குப் பிரித்து விநியோகித்தவர்களுடைய கைங்கரியம் இது. இதனால் எங்களுக்குக் கொஞ்சம் வியாபாரம் 'டல்' தான். மேலும் எங்களுக்கு 'ஸ்டாக்'கும் சரியான நேரத்தில் வருவதில்லை'' என்றார்.



• ''இவ்வளவு சீக்கிரம் தீர்ந்து போச்சே... இன்னொண்ணு கேட்டால் திட்டுவாங்களோ?''



• அலங்கார ஐஸ்கிரீம் தயாராகிறது...

''ஒவ்வொரு கிண்ணம் ஐஸ்கிரீமிலும் சாக்லேட் ஸாஸ், முந்திரிப் பருப்பு போன்ற

## வீட்டிலேயே ஐஸ்கிரீம்!

### கஸ்டர்ட் ஐஸ்கிரீம்:

தேவையான பொருட்கள்: பால் — 1 லிட்டர், கஸ்டர்டு பௌடர் — 2 டேபிள் ஸ்பூன், சர்க்கரை — 4 டேபிள் ஸ்பூன், திரவ குளுக்கோஸ் — 1 டேபிள் ஸ்பூன், வெனிலா எசன்ஸ் — 4 துளிகள்.

செய்முறை: ஒரு லிட்டர் பாலைப் பாதியாய்ச் சுண்டும்படி காய்ச்ச வேண்டும். சிறிது பாலில், கஸ்டர்டு பௌடரை, கட்டி தட்டாமல் நன்றாய்க் கரைத்து, அதைக் கொதித்துக் கொண்டிருக்கும் பாலில் விட்டு, தொடர்ந்து கிளறியபடி இருக்க வேண்டும். ஐந்து நிமிடத்தில், சிறிது கெட்டியாகி விடும். உடனே இறக்கி, சர்க்கரை மற்றும் திரவ குளுக்கோஸை அதனுடன் கலந்து, மிக்ஸியில் போட்டு, ஐந்து நிமிடங்கள் சுற்ற வேண்டும். பிறகு அதை ஒரு பாத்திரத்தில் எடுத்து, ஃப்ரிசரில் வைத்து, உறைய வைக்க வேண்டும். ஆறு மணி நேரத்தில் ஐஸ்கிரீம் தயார்!

### குல்ஃபி ஐஸ்கிரீம்:

தேவையான பொருட்கள்: பால் — 2 லிட்டர், கார்ன் ஃப்ளோர் — 6 டேபிள் ஸ்பூன், சர்க்கரை — 6 டேபிள் ஸ்பூன், ஏலக்காய்ப் பொடி — 1 டேபிள் ஸ்பூன், பொடியாய் நறுக்கிய பாதாம், முந்திரி சிறிதளவு.

செய்முறை: பாலின் நிறம் லேசாக மாறி, பால்கோவா வாசனை வரும் வரை சுண்டக் காய்ச்ச வேண்டும். சிறிதளவு சுண்டாத பாலில், கார்ன் ஃப்ளோரைக் கட்டி தட்டாமல் கரைத்து, அதைக் காய்ச்சிய பாலுடன் கலந்து, ஆறவிட வேண்டும். ஆறியபின் சர்க்கரை, ஏலக்காய்ப் பொடி முதலானவற்றைக் கலந்து, மிக்ஸியில் போட்டு, ஐந்து நிமிடங்கள் சுற்றிவிட்டு, இறக்கி, நறுக்கிய பாதாம், முந்திரியைப் போட்டு, நன்றாய்க் கலக்க வேண்டும். பின்னர், அதை குல்ஃபி அச்சில் போட்டு, ஃப்ரிசரில் வைத்து விட்டால், உறைந்ததும், குல்ஃபி தயார்!

— பாரதி மௌலி



கொகுறுகள் நீங்கலாக முந்நூறு கலோரிகள் உள்ளன!'' என்று எச்சரிக்கிறார் சத்துணவு ஆலோசகர் சாந்தா கிருஷ்ணசாமி. ''ஐஸ்கிரீமை நிதானமாகச் சுவைத்துச் சாப்பிட்டாலும் எடை கிடுகிடுவென்று ஏறும்!

டாக்டர் வசந்தா விஜயராகவன் காது, மூக்கு, தொண்டை நிபுணர். ''வெயிலில் அலைந்து விட்டு, வியர்க்க விறுவிறுக்கப் போய் ஐஸ்கிரீம் வாங்கிச் சாப்பிடாதீர்கள்'' என்கிறார் இவர். ''இப்படிச் செய்தால் தொண்டை மூக்குப் பகுதியிலுள்ள ரத்த நாளங்கள் 'சட்'டென்று குளிர்கின்றன. அங்கே ஏற்கெனவே பதுங்கியிருக்கும் நுண்ணுயிர்கள் இந்தக் குளிர்விப்பினால் பல்கிப் பெருகி, தொண்டை மூக்குப் பகுதியைப் பாதிக்கும். ஏற்கெனவே சைனஸ், ஆஸ்துமா போன்ற தொந்தரவுகள் இருந்தால் ஐஸ்கிரீம் நிச்சயமாகப் பிரச்னையை வளர்க்கும்.''

**ஜீ**ரோ டிகிரிக்கும் குறைவான வெப்ப நிலையில் கூட தொண்டை சம்பந்தமான பாதிப்புகளை உண்டாக்கும் பாக்டீரியா கிருமிகள் பல்கிப் பெருகும். எனவே பதப்படுத்திய பாலைக் கொண்டு தயாரிக்கப்பட்டு, படுசுத்தமான முறையில் பாக் செய்யப்படும் ஐஸ்கிரீமுக்குக் கூட அயல் நாடுகளில் இரண்டு மாத கால ஆயுளைத் தான் விதித்துள்ளார்கள்.

வெயில் அதிகமாக உள்ள, தினந்தோறும் 'பவர் கட்' ஆகிற நம் நாட்டிலோ ஒரு முறை உருகிய ஐஸ்கிரீமை மீண்டும் உறைய வைத்து விற்பதும் வாங்கிச் சாப்பிடுவதும் சகஜம். ஆனால் இது மிகவும் தவறான காரியம்.

**B**ureau of Indian Standards, ஐஸ்கிரீமுக்கான தரக்கட்டுப்பாட்டு விதிகளைக் கவனமாக அமைத்துள்ளது. ஆனால் அவற்றுள் எத்தனை விதிகள் கடைப்பிடிக்கப்படுகின்றன என்பதுதான் பெரிய கேள்விக்குறி!

- ஐஸ்கிரீம் தொழிற்சாலையில் சுத்தம் சுகாதாரம் காப்பதற்கு விதிகள்;
- அங்கு பயன்படுத்தப்படும் தண்ணீரை அவ்வப்போது பரிசோதித்து, தரம் காக்க விதிகள்;
- ஐஸ்கிரீம் தயாரிக்க உபயோகிக்கப்படும் இதர பொருள்களுக்கான தரக் கட்டுப்பாடு விதிகள்.

— இவற்றை விவரமாகப் பட்டியலிட்டுள்ளது BIS. தொழிற்சாலையில் சென்று நாம் சோதனை போட முடியாது. ஆனால் சில்லறை விற்பனைக்கு BIS விதிக்கும் தரக் கட்டுப்பாடாவது கடைப்பிடிக்கப்படுகிறதா என்று நம்மால் கவனிக்க முடியும்.

- ஐஸ்கிரீம் விற்கும் இடங்கள் தினமும்

கிருமி நாசினியை உள்ளடக்கிய குறிப்பிட்ட சுத்திகரிப்பு திரவம் கொண்டு கழுவப்பட வேண்டும்.

- ஃபாக்டரி பாக்கிங்கைக் கூடியவரையில் பிரிக்காமல் விற்பனை செய்ய வேண்டும்.
- ஐஸ்கிரீம் விற்கும் தனி வியாபாரிகள் மருத்துவப் பரிசோதனைக்கு உட்படுத்தப்பட வேண்டும்.
- தள்ளு வண்டியில் ஐஸ்கிரீம் விற்பவர்கள், காலி கப்களையும் உபயோகித்த ஸ்பூன்களையும் போட வண்டியுடன் குப்பைக் கூடை இணைத்து வைத்திருக்க வேண்டும்.
- ஐஸ்கிரீமைப் பரிமாறப் பயன்படுத்தப்படும் கரண்டிகள், கிண்ணங்கள், சுத்திகரிப்புத் திரவத்தில் அமிழ்த்தி வைக்கப்பட்டிருக்க வேண்டும். அல்லது, எண்பது டிகிரிசென்டிகிரேட் வெப்பமுள்ள சுடுநீரில் அவ்வப்போது கழுவப்பட வேண்டும்.
- ஒருமுறை உருகிவிட்ட ஐஸ்கிரீமை, மீண்டும் உறைய வைத்துப் பரிமாறவே கூடாது.

— இவை ஐஸ்கிரீம் வியாபாரிகளுக்கு BIS விதிக்கும் தரக்கட்டுப்பாடுகள். இவற்றுள் ஐம்பது சதவிகிதமாவது நம்மூர் ஹோட்டல்களிலும் ஐஸ்கிரீம் கடைகளிலும் கடைப்பிடிக்கப்படுகின்றனவா என்பதே சந்தேகம்தான்.

**டி**ஸ்கோ ஐஸ், குச்சி ஐஸ் என்று மலிவு விலையில் விற்கப்படும் உறைந்த சர்க்கரைக் கரைசலை வாங்கிச் சாப்பிடுபவர்களோ ஐம்பது பைசாவுக்கு வியாதியை விலைக்கு வாங்குவதோடு, வேறொரு மிகப் பெரிய அபாயத்தையும் காசு கொடுத்து வாங்குவதாகச் சொல்கிறார் போதைப் பொருள் தடுப்பு இயக்கத்தைச் சேர்ந்த பேராசிரியர் ஒருவர்.

பள்ளிக்கூட வாசல்களில் விற்கப்படும் இந்த ஐஸ்கள் மூலம் இளைஞர்கள் போதைப் பழக்கத்துக்கு அறிமுகப்படுத்தப்படுவதும் உண்டு. "ஒவ்வொரு குச்சியிலும் ஒரு சிட்டா போதைப் பொருள் போட்டுத் தருகிறார்கள். அதற்குப் பழகிப் போகும் இளைஞர்களைச் சுலபமாக வளைத்துப் போட்டு, போதை மருந்து புகைக்கவும் ஊசி போட்டுக் கொள்ளவும் செய்து விடுகிறார்கள்'' என்றார் அந்தப் பேராசிரியர்.

ஐஸ்கிரீம் சாப்பிடாமலேயே முதுகுத்தண்டு வரை சில்லிட்டுப் போனது!

**— நிர்மலா சக்கரவர்த்தி**

அட்டை வண்ணப்படம், படங்கள்:
**ரமணன்**

# போன வருஷத்தோட

மதிய உணவுக்காக் வீட்டுக்கு வந்த நாகலிங்கம், தம் கனத்த சரீரத்தைக் கூடத்து ஊஞ்சலில் குந்த வைத்தார்.

சமையல் கட்டில் இருந்த மீனாட்சிக்குக் கணவன் வந்த சந்தடி தெரிந்தது.

''கடுதாசிக்கு மேல் கடுதாசி எழுதிக் கொண்டிருக்கிறார், அந்த ராஜகோபால். நீங்களானால் பதில் எழுதாமல் இருக்கிறீர்கள். இன்னிக்குக் கூட ஒண்ணு வந்தது'' என்றவளாய்'' புடைவைத் தலைப்பை சுறிக் கொண்டே வெளியில் வந்தாள், அவள்.

நாகலிங்கத்தின் முகம் பாறையாய் இறுகி இருந்தது. ''என்ன எழுதி இருக்கிறார்?'' என்றார்—வேண்டா வெறுப்புடன்.

டீ. வி. மீதிருந்த அந்த ஊதா நிறக் கடிதத்தை எடுத்து வந்தாள், மீனாட்சி.

''படிக்கிறேன், கேளுங்கள். என் பெண் சுகன்யா, பி.காம். முடித்து விட்டாள்.

" இதுபற்றி ஏற்கெனவே இரண்டு கடிதங்கள் தங்களுக்கு எழுதி இருக்கிறேன். இது மூன்றாவது கடிதம். இதைப் பார்த்த பிறகாவது தயவு செய்து பதில் எழுதவும். இல்லாவிட்டால் இன்னும் சில தினங்களில் நான் நேரில் வரலாம் என்றிருக்கிறேன். — இப்படிக்கு ராஜகோபால்...''

கடிதம் முடிந்தது.

''வரட்டும்'' என்று நமுட்டுத்தனமாய்ச் சிரித்தார், நாகலிங்கம். ''நாம் அவர்களுக்குக் கடிதம் போடுவது, நமக்கு மரியாதை இல்லை. அதனால்... நேரில்தான் பேச வேண்டும்.''

மீனாட்சிக்கு விழி பிதுங்கியது. ''எல்லாம்தான் போன வருஷமே பேசியாகி விட்டதே. இன்னும் என்ன பேசப் போகிறீர்களாம்?''

''அதாவது மீனா... போன வருஷம் சீர், செனத்தி பேசி முடிவு பண்ணியதெல்லாம் வாஸ்தவம்தான். ஆனால், அன்றைக்கு நம் சேகரின் சம்பளம் இரண்டாயிரத்து இருநூறு ரூபாய்தான். இப்போது மூவாயிரம் ரூபாய். பத்து...இருபதில்லை.எட்டு நூறு ஏற்றம்.''

''எல்லாம் அந்தப் பெண் சுகன்யாவின் முகராசி.''

''வாயைக் கழுவு.'' என்று மனைவியை வெறித்தார், நாகலிங்கம். ''பெண்ணின் முகராசியும் இல்லை. முதுகு ராசியும் இல்லை. எல்லாம் என் மகன் உத்தியோகம் பார்க்கும் கம்பெனி ராசி. எக்கச்சக்கமாய் லாபம் வருகிறது. சம்பளத்தை அள்ளிக் கொடுக்கிறார்கள்.''

''அதனாலே...?''

''இ ர ண் டா யி ர த் து க் கு இருபத்தைந்து சவரன் நகை கேட்டோம். மூவாயிரத்துக்கு முப்பத்



# போச்சு

## தமிழினியன்

தைந்து சவரனாவது கேட்க வேண்டும். அதுதான் நமக்குக் கௌரவம்.''

மௌனமாய் நின்றாள், மீனாட்சி.

''என்ன பேச்சு... மூச்சைக் காணோம்?''

''எனக்கென்னவோ இது சரியாய்ப் படவில்லை. சீர், சீதனம் முடிவான பிறகு, மறுபடியும் மாற்றிப் பேசுவது கொஞ்சம் கூட நியாயம் இல்லை.''

''நான் ஒண்ணும் அடாவடியாய்க் கேட்கவில்லை. ஆதாரத்தோடுதானே கேட்கிறேன்?''

''ஒருவேளை அவருக்கு முடியாது போனால்?''

''நிச்சயம் அப்படிச் சொல்ல மாட்டார். ஏனென்றால் இந்த மாதிரி அயனான வரன் அவருக்குக் கிடைக்குமா? முப்பத்தைந்து மசியா விட்டாலும், ஒண்ணு... ரெண்டு சவரனாவதுகூட்டித்தரலாம்இல்லையா? வந்தவரை நமக்கு லாபம்தானே?''

''உம்...'' விரக்தியாய்ச் சிரித்தாள், மீனாட்சி. ''கல்யாணம், சுப காரியம். ஆசியையும், அருளையும்பெற்று மணப்பூர்வமாய் வாழ வேண்டிய ஆயிரம் காலத்துப் பயிர். அதிலேயும் நீங்கள் உங்கள் வியாபார பேரத்தைக் காட்டறீங்களே!''

''எப்போதும் காற்று வீசாது, மீனாட்சி. அடிக்கிற போதுதான் தூற்றிக் கொள்ள வேண்டும்.''

புத்திசாலித்தனமாய்ச் சிரித்த நாகலிங்கம், மயிலம் சந்தையில் மளிகைக் கடை வைத்திருந்தார். உப்பு மூட்டையைக் கூட 'மார்க்கெட்' நிலவரம் பார்க்காமல் பிரிக்க மாட்டார். காசில் அத்தனை கெட்டி.

அவரது ஒரே மகன், சேகர். பாலிடெக்னிக் பயிற்சி முடித்துத் தனியார் கம்பெனியில் சார்ஜ்மேனாக இருந்தான். அவனுக்குத் தரகர் மூலமாய்த் தஞ்சாவூரிலிருந்து வந்த சம்பந்தம் தான் இந்த சுகன்யா. ராஜகோபாலனின் மகள்.

ரொக்கம், பாத்திரம், பண்டங்கள், கல்யாணச் செலவு, தீபாவளிக்கு டி.வி.எஸ்.-50 — இவற்றுடன் இருபத்தைந்து சவரன் நகை என்று இரு தரப்பிலும் முடிவான போது —

''பெண்ணுக்கு இன்னும் ஒரு வருஷப் படிப்பு இருக்கிறது. முடிந்ததும் முகூர்த்தம் வைக்கலாமே'' என்று ராஜகோபாலன் கைபிசைந்தார்.

''அதுக்கென்ன? அப்படியே செய்திடுவோம்'' என்று இயல்பாகவே ஏற்றுக் கொண்டிருந்தார், நாகலிங்கம்.

ஆனால் —

இன்று அவர் காட்டில் மழை.

மணமகனின் 'மார்க்கெட்' இமயம் போல் ஏறி விட்டது.

நிலவரத்துக்குத் தகுந்த லாபக் கணக்குப் போட்டார், நாகலிங்கம்.

ஆகவேதான், ராஜகோபாலனின் கடிதங்களுக்குப் பதில் போடாமல் முறுக்கிக் கொண்டிருந்தார், அவர்.

மூன்றாம் நாள்.

''நமஸ்காரம்'' என்று கைகூப்பிக் கொண்டே மிகவும் அடக்கத்துடன் உள்ளே நுழைந்தார் ராஜகோபால்.

முகத்தில் ஓர் இறுக்கத்தை வரவழைத்துக் கொண்டு, ''வாங்க'' என்றார், நாகலிங்கம்.

நல விசாரணை, காப்பி உபசாரம் முடிந்தது.

நாகலிங்கம் ஒன்றும் பேசாதிருக்கவே, ராஜகோபாலனே ஆரம்பித்தார்.

''மூணு கடுதாசி போட்டேனே, கிடைத்ததா?''

''கிடைக்காமல் என்ன? முகவரி சரியாய் இருந்தால் வந்துதானே ஆகணும்?'' — டாம்பீகத் தொனி.

''உங்களிடமிருந்து பதில் வரவில்லை என்றுதான் கிளம்பி வந்தேன். போன வருஷமே எல்லாம் பேசி முடிச்சுட்டோம். அதன் படி...'' தயங்கினார், அவர்.

''அ...து...முடியாதுராஜகோபால்.''

---

ராமாயணம் தொலைக்காட்சித் தொடரில் நடித்தவர்களுக்கும், மகாபாரதம் தொடரில் நடித்தவர்களுக்கும் இடையே நட்பு முறையிலான கிரிக்கெட் மாட்ச், அகமதாபாத்தில் நடைபெற உள்ளது. ராமாயண அணியின் மானேஜர் ராமானந்த சாகர். மகாபாரத அணிக்கு பி. ஆர். சோப்ரா. கிடைக்கும் வருமானம், ஆந்திரா புயல் நிவாரண நிதிக்கு அளிக்கப்படவிருக்கிறது.

தகவல்: ஜூலி.





"நேற்று, ஹோட்டல்ல சாப்பிட்டுட்டு எனக்கு ஒரு புதுமையான அனுபவம் கிடைச்சது!"

"மாவாட்டினீங்களாக்கும்...?"

"அதுல என்ன புதுமை இருக்கு...? டேபிள் துடைச்சேனாக்கும்...!"

— சீர்காழி வி. ரேவதி.

"முடியாதா?" வாய் பிளந்தார் ராஜகோபால். "அப்படியானால் நாம் பேசி நிச்சயம் பண்ணியதெல்லாம்...?" புருவம் முழுக்கக் கேள்வி முடிச்சுக்கள்.

"போன வருஷத்தோடு போயிடுச்சு." ஏகத்தாளமாகச் சிரித்தார், நாகலிங்கம்.

"புரியலை!"

"காலாவதி ஆயிடுச்சு. இந்த வருஷம் புதுசாய்த் தான் பேசணும். பேசலாமா?"

இதைக் கேட்டதும் ராஜகோபால் இடுக்கிடுவார், பதறி எழுவார் என எதிர்பார்த்தார், நாகலிங்கம்.

ஆனால், அப்படி எதுவுமே நிகழவில்லை.

ராஜகோபாலனின் முகத்தில் தெளிவான புன்னகை தவழ்ந்தது. அமைதியாகச் சொன்னார், அவர்.

"நன்றி, மிஸ்டர் நாகலிங்கம். என் பொண்ணு, பி. காம். ஃபர்ஸ்ட் கிளாஸிலே பாஸ் பண்ணியதைக் கேள்விப்பட்டு உள்ளூரிலேயே ஒரு வரன் வந்திருக்கிறது. பையன், சார்ட்டட் அக்கவுண்டன்ஸி முடிச்சுட்டு பேங்கிலே பெரிய வேலையில இருக்கிறார். நாலாயிரம் ரூபாய் சம்பளம். சீர் எதுவும் அதிகமாக அவர்கள் எதிர்பார்க்கவில்லை. உங்கள் பையனுக்குப் பேசின மரதிரியே கொடுத்தால் போதும்னு சொல்லிட்டாங்க.

"ஆனால், போன வருஷம் நாம் சம்பந்தம் பேசி முடிவு பண்ணிட்டோமே. அந்த வார்த்தை மாறக் கூடாது என்பதற்காகத்தான் உங்கள் அபிப்பிராயம் தெரிந்து போக வந்தேன். என் மகள் கொடுத்து வைத்தவள். நீங்களே அந்தப் பேச்சு வார்த்தையை முறிச்சுட்டீங்க. ரொம்ப சந்தோஷம். நான் வர்றேன்."

கம்பீரமாய் வெளியேறினார், ராஜகோபால்.

தூற்றிப் பார்க்கும் ஆசையில் காற்றை எதிர்பார்த்தார், நாகலிங்கம்.

புயலே அடித்து விட்டது.

# சிறு சேமிப்புத் துறையின்
# பரிசுகள் இணைந்த
# சேமிப்பு பெருக்கும் திட்டம் 1990
# வென்றிடுங்கள் ஒரு அழகிய மாருதி கார்!




- ஒவ்வொரு ரூ.500/- முதலீட்டிற்கு வருமான வரி விலக்கு மற்றும் பரிசுகள்.
- அனைத்து மாவட்டத்திலும் ஒவ்வொரு ஒரு லட்சம் கூப்பன்களுக்கு குலுக்கல் நடைபெறும்
- NSS 87 ல் முதலீடு செய்து 100% வருமானவரி விலக்கு ரூ.40,000/- வரை பெற்றிடுங்கள்
- NSC 8வது வெளியீடு/IVP ல் முதலீடு செய்து கணிசமான அளவு வருமான வரி விலக்கு பெறுங்கள்.
- மத்திய அரசுக்கு இணையாக சிறுசேமிப்பு முகவர்களுக்கு ஊக்கத் தொகை வழங்கப்படும்.
- ரூ.1000/-ம் அதற்கு மேலும் முதலீடு செய்பவர்களுக்கு 1% ஊக்கத்தொகை கிடைக்கும்*

ரூ.500/- முதலீடு செய்து பளபளப்பான புதிய மாருதி காருக்கு சொந்தக்காரர் ஆகும் அதிர்ஷ்டசாலி நீங்களாக கூட இருக்கலாம். சிறு சேமிப்பு-வரிவிலக்குடன் உயர் வருவாயை அளிக்கும் முதலீட்டு திட்டங்கள்,



1 முதல் பரிசு - பஜாஜ் ஸ்கூட்டர் | 3 இரண்டாவது பரிசுகள் - E.C. டி.வி. | 3 மூன்றாவது பரிசுகள் ரெப்ரிஜிரேட்டர் | 5 நான்காவது பரிசுகள் - மோபட் | 10 ஐந்தாவது பரிசுகள் தையல் எந்திரம் | 10 ஆறாவது பரிசுகள் - சைக்கிள் | 30 ஏழாவது பரிசுகள் - குவார்ட்ஸ் கைக் கடிகாரம் | 200 ஆறுதல் பரிசுகள் - சுவர்க்கடிகாரம்

ஒவ்வொரு ரூ.500/- முதலீட்டிற்கு ஒரு இலவச பரிசுக்கூப்பன் பெற்றிடுங்கள். தனி நபர்கள் மட்டுமே கீழ்க்கண்ட திட்டங்களில் தமிழ்நாட்டில் ஜூன் '90 முதல் டிசம்பர் '90 வரை முதலீடு செய்து பெறலாம்.
சேமிப்பு பத்திரம் எல்லா அஞ்சல் நிலையங்களில் கிடைக்கும்

- தேசிய சேமிப்பு பத்திரம் 8வது வெளியீடு
- தேசிய சேமிப்பு திட்டம் 1987
- பொது சேமநல நிதி
- மாதாந்திர வருமானத் திட்டம்
- விவசாயிகள் சேமிப்பு பத்திரம்
  இந்திரா சேமிப்பு பத்திரம்
- அஞ்சலகக் குறித்தகால முதலீடு
  அஞ்சலக தொடர்வைப்புத் திட்டம்/ வளரும் மாத சேமிப்புத்திட்டம்

பரிசுக் கூப்பன்கள்—
மாவட்ட ஆட்சியாளர் அலுவலகங்கள்,
வட்டாட்சியர் அலுவலகங்கள்
வட்டார வளர்ச்சி
அலுவலகங்களில் கிடைக்கும்.

இயக்குநர்,
சிறுசேமிப்புத்துறை
143, அண்ணா சாலை,
சென்னை-600 002.
தொலைபேசி: 840223/846209

DIPR/1744/HAS/90/ARES



*Children can still frolic on unspoilt beaches in Madras and Goa. Because Hostalen® pipes disperse harmful effluents far from these coastlines.*

For too long, conventional wisdom had it that pollution was an inevitable consequence of industrialisation. Till PIL set about changing that notion.

**Safeguarding the natural environment**

In several cases, PIL has provided Effluent Disposal Systems for industrial projects. Hostalen pipelines that carry treated effluents far out into the sea where they are safely dispersed by tidal currents.

**Special problems need Hostalen solutions**

PIL's Hostalen well merits the term 'wonder material'. It is light, flexible, corrosion-resistant and chemically inert. So versatile in fact that projects can be planned and executed in less time and at less cost than if conventional piping materials had been used.

**PIL—better ideas for a better life**

As in environmental protection, so also in other vital fields, we're improving the quality of life. Through superior products. And the know-how gained in 25 years of grappling with complex problems.

# We're making sure pollution isn't the price of progress

**POLYOLEFINS INDUSTRIES LIMITED**

Mafatlal Centre, Nariman Point
Bombay 400 021

Hostalen® is the registered trademark of Hoechst AG, West Germany

**PIL—Technology for a better life**

CHAITRA-B PIL-616 R(2)

# மயில் போன்ற நிலையும் ஒயிலான உடலும்

16

**ம**யூராசனம் பழகும் அன்பர்களின் மூக்கின் மேல் பூமாதேவிக்கு அதிகப் பிரியம் உண்டாகி விடும்! தலையை முன்னுக்கு நீட்டி முழங்கால்களைத் தூக்கும் போது, மூக்கு அதிவேகமாய்த் தரையுடன் முட்டும்! சிலருக்கு முகவாய்க் கட்டை, பல், நெற்றி போன்ற இடங்கள் தரையில் முட்டும். அவரவர் விழும் விதத்தைப் பொருத்த விஷயம் இது. சிலர் முழங்கைகள் மீது உடல் பளுவை ஏற்றிக் கால்களைத் தூக்கும் போது, முழங்கை நழுவிப் பக்கவாட்டில் சரிந்து விழுந்து விடுவார்கள்.

இவற்றுக்குப் பயப்படுகிறவர்கள், மூக்குக்கு ஒரு தலையணை, இரண்டு பக்கங் களுக்கும் இரண்டு தலையணைகள் என்று போட்டுக் கொண்டு மயூராசனம் பழகலாம். ஒருவேளை விழ நேர்ந்தால் பிடித்துக் கொள் ளப் பக்கத்தில் யாரையேனும் துணைக்கு வைத்துக் கொள்ளவும் செய்யலாம். ஆனால் இதையே பழக்கமாக்கிக் கொண்டு விடக் கூடாது. அப்படிச் செய்தால் மயூரா சனம், தலையணை ஆசனமாகி விடும்! 'எப்படியும் மயூராசனம் செய்தே தீருவேன்; சரியாகச் செய்வேன்' என்று கங்கணம் கட்டிக் கொண்டால், அவரவர் உடல் நிலையைப் பொருத்து ஒரு வாரம், அல்லது ஒரு மாதத்தில் சரியாகச் செய்ய வந்து விடும்.

சிலருக்கு உள்ளங்கையை முழங்கால் பக்கமாகத் திருப்பி வைத்து முழங்கையை மடிக்கும்போதே மணிக்கட்டு நரம்புகள் இழுக்கும்; மணிக்கட்டில் வலிக்கும். சரீர பளுவை அதன் மீது ஏற்றினால் நரம்புகள் இன்னும் இழுக்கப்பட்டு மணிக்கட்டில் 'சுளீர்' என்று வலிக்கும். 'வலிக்கிறதே' என்று நிறுத்தி விடவும் கூடாது; வலிக்க வலிக்க முரட்டுத்தனமாக ஆசனம் பண்ண வும் கூடாது. 'இத்தனை நாள் சோம்பி யிருந்த உடலை வாட்டுவதால் சற்று வலிக் கிறது' என்பதைப் புரிந்து கொண்டு விட்டுப் பிடிக்க வேண்டும். தினசரி சற்று முழங் கையை மடிப்பது, லேசாய் உடலைத் தாங்கிப் பார்ப்பது என்று படிப்படியாக முன்னேற வேண்டும். இப்படி நிதானமாகப் பழகி வந்தால், மணிக்கட்டின் தசைகள், மற்றும் நரம்புகள் இளகிக் கொடுக்கும். பாரம் தாங்கும் நுணுக்கம் புரிந்து போகும். இவ்வாறு சக்தி ஏற்பட்ட பிறகு சற்று அதிக மாகப் பளுவைத் தாங்கி முன்னுக்கு வர முயன்றால் பாதம் மேலேறும். கஷ்டப்படா மல் முன்னேறுவதுதான் முக்கியம்.

**சை**க்கிள் விட்டுப் பழக பாலன்ஸ் முக்கியம் என்பது உங்களுக்குத் தெரியும். பாலன்ஸ் பழகுகிறவரை கீழே விழத்தான் செய்வோம். முட்டிக்காலில் சிராய்ப்பு ஏற்படத்தான் செய்கிறது. அதனால் சைக் கிள் பழகுவதை நிறுத்தி விடுகிறோமா? அதன் உபயோகம் நமக்குத் தெரிவதால், 'இந்த பாலன்ஸ் பழகி விட்டால் ரொம்ப வசதியாயிற்றே' என்று விடாமல் முயற்சி செய்கிறோம். அதைப் போலத்தான் மயூராச னமும். பாலன்ஸ் பழகுகிற வரை சற்று சிரமம். பழகிய பின்னரோ அதனால் ஏற் படும் பலன் கொஞ்ச நஞ்சமில்லை. மேலும், சைக்கிள் ஓட்டப் பழகும் போது அடிபடு கிற அளவுக்கு இதில் ஆபத்து கிடையாது. மருந்து போட்டுக் காயம் ஆறச் செய்கிற அளவுக்கு ஏதும் நடந்து விடாது. எனவே, இதிலுள்ள நன்மைகளை எண்ணிப் பார்த்து, விடாமுயற்சியுடன் மயூராசனம் பழக வேண்டும்.

**ப**டத்தில் உள்ளபடி செய்ய வந்த பிறகு, இன்னமும் ஒரு படி முன்னேறலாம். படத்தில் இரு கால்களும் சேர்ந்தாற்போல் இருக்கிறதல்லவா? அந்த நிலையிலிருந்து கால்களைக் கூடுமானவரை அகட்டி நிற்பது. இது மயிலானது தோகையை விரித்தாற் போல் இருக்கும். இது, இரண்டாவது பயிற்சி. இதையும் மூன்றிலிருந்து ஆறு தடவை வரை செய்யலாம்.

இந்த நிலைமையிலிருந்து, அதாவது கால்களை விரித்த நிலையிலிருந்து, கால் களைக் கூடுமானவரை மேலே தூக்க வேண்டும். முழங்கால்களை மடக்கக்

**ஆரோக்கிய ரகசியம்:**

**வி. என். குமாரசாமி**



கூடாது. இது மயிலானது தோகையை மேல் நோக்கி விரித்து ஆடுவது போன்ற நிலை! இந்தப் பயிற்சியையும் மூன்றிலிருந்து ஆறு தடவை வரை செய்யலாம். இது மூன்றாவது பயிற்சி.

நான்காவது பயிற்சி என்ன தெரியுமா? இரண்டு கைகளும் உடலைத் தாங்குவதற்குப் பதில் ஒரு கையால் தாங்குவது! இது மயிலானது 'ஒரு காலால் நிற்பது போன்ற நிலை. இதற்கு முழங்கையைச் சற்று வயிற்றின் உள் பக்கம் தள்ளி வைத்து அதன் மேல் சரீரத்தை நிறுத்த வேண்டும். இந்த நான்காவது நிலையிலேயே 'ஆ' பிரிவு உண்டு. அதாவது முன் தாங்கிய கையை எடுத்து விட்டு இன்னொரு கை மேல் நிற்பது. இப்படியெல்லாம் செய்யும் போது பாலன்ஸ் இழந்து விழுவது சகஜம்தான். ஆனால் விடாமுயற்சியுடன் பழகி, சிறுகச் சிறுக முன்னேறி விடலாம். இதையும் மூன்றிலிருந்து ஆறு தடவை வரை செய்யலாம்.

ஒவ்வொன்றையும் ஆறு தடவை செய்ய நேரமில்லை என்று கருதுவோர் ஒரு தடவை, இரண்டு தடவை என்று குறைத்துக் கொள்ளலாம்.

இந்த ஆசனம், சிறு வயதினருக்கு எளிதாக வரும். வயது முதிர்ந்தவர்களுக்குக் கஷ்டம். ஆனாலும் முழங்கைகள் மேல் சற்று உடலை ஊன்றினாற்போல் தினமும் பழகி வந்தாலே பெரும் பலன்கள் ஏற்படும்.

இந்த ஆசனத்தைப் பெண்கள் கர்ப்பம் என்று தெரிந்த பிறகு ஒரு நாள் கூடச் செய்யக் கூடாது. மற்ற சமயங்களில் செய்யலாம்.

சென்ற இதழில் பித்தப் பை, பித்தநீர் இவை பற்றியும், மயூராசனம் செய்வதால் அவை எப்படி ஊக்கம் பெறுகின்றன என்பது குறித்தும் சொன்னேன். மயூராசனத்தால் வேறு பல பலன்களும் உண்டு. அவற்றுள் முக்கியமானது, மயூராசனம் செய்து வருகிறவர்களுக்கு மலச்சிக்கல் பிரச்னையே ஏற்படாது என்பதுதான். மலச்சிக்கலை முன்னிட்டு எத்தனை விதமான மருந்து, மாத்திரைகள் கடைகளில் விற்கப்படுகின்றன என்பது நமக்குத் தெரியும். அவற்றில் எதையுமே நாட வேண்டிய அவசியம் ஏற்படாது. வயிற்று உறுப்புக்கள் எல்லாம் சுறுசுறுப்படைந்து, அவை, தமது கடமைகளை ஒழுங்காகச் செய்து வரும். வயிற்றுக் கொழுப்புக் கரையும். ரத்த விருத்தி உண்டாகும். அஜீரணம், மூலம், நீரிழிவு எனப்படும் டயபடீஸ், சோம்பல் முதலிய நோய்கள் நம்மை அண்டாது. எட்டவே நிற்கும்!

(தொடரும்)

படம்: உத்ரா

* எதிர் வீட்டில் சில இளைஞர்கள் சிறுகதை இன்றையச் சமூக நிலைமையை அழகாக எடுத்துக் காட்டுகிறது. ரங்கநாயகி போன்றவர்கள் தங்கள் பெண்களைப் பாதுகாத்துக் கொள்வதாக எண்ணிக் கொண்டு வம்பை விலைக்கு வாங்கி விடுகிறார்கள்!

பூண்டி தீர்த்தேக்கம். ஆ. ஜீவானந்தம்.

* 'பரிசு' சிறுகதை நெஞ்சைத் தொடும் விதத்தில் அமைந்திருந்தது. அதன் எதிர்க் கருத்தாகக் கட்டை விரல் கதை அமைந்திருந்தது! கட்டை விரல் வாழ்வின் யதார்த்தத்தை நன்கு பிரதிபலித்தது. எழுதிய ஆசிரியர்களுக்குப் பாராட்டுக்கள்.

தஞ்சாவூர். கே. லக்ஷ்மி.

* சிவசங்கரியின் 'எதிர் வீட்டில் சில இளைஞர்கள்' கதை படித்தேன். இளைஞர்களிடம் நாம் காட்ட வேண்டிய அணுகுமுறையைப் பற்றி அவர் கூறியிருப்பதெல்லாம் பிராக்டிகல் வாழ்க்கைக்கு ஒத்து வருமா என்பது தெரியவில்லை.

திருச்சி — 16. ஜானகி மைந்தன் எஸ். ராஜகோபால்.

* அப்பப்பா கருப்பு — வெள்ளைப் படமாக இருந்தாலும், என்ன அருமை! அதை விட, காலை நேரக் கடற்கரைக் காட்சிகளுக்கான வசனங்கள் வெகு பொருத்தம்! இது போன்ற விஷயங்களில் கல்கிக்கு நிகர் கல்கியே! புகைப்பட நிபுணருக்குப் பாராட்டுக்கள்!

முத்துப்பேட்டை. தஞ்சைத் தரணியன்.

செய்திகளைக் கவிதையாக்கி —
அரசியல் வாதிகளில்
இவரின் —
அக அழுகினை
அழகாய் எடுத்து
இயம்பிய —
ஐயா சாருகேசி...
கவனம்!
வரப்போகுது உமக்கு
மிரட்டல் கடுதாசி!

சென்னை — 51. வா. வசந்தி.

* முதல்வருக்கு ராஜராஜன் விருது கொடுத்த விழாவில் ஒரு பிரபல பெண் எழுத்தாளர், கலைஞர் 'மேல் சாவனிஸ்ட்' அல்ல; பெண்கள் பால் கருணையுள்ளம் கொண்டவரே என்று புகழ்ந்துள்ளார். முதல்வர் சார்ந்த குடும்பப் பத்திரிகையில் ஒருமுறை கிளுகிளு ஸ்பெஷல் வெளியிட்டு மாதர் தம்மை இழிவு செய்த மடமையைக் கொளுத்த அந்தச் சகோதரியை ஏன் முன் வரவில்லை?

சென்னை — 92. கி. ராஜ்கோபால்.

* உலகக் கோப்பை கால்பந்து போட்டியில் 'இந்தியா' இடம்பெறவில்லையே! என்று வருத்தத்துடன் இருந்தேன். உங்களின் 'இந்தியா கோப்பை — கால்பந்துப் போட்டி' விமர்சனத்தைப் பார்த்ததும் தான் தெரிந்து கொண்டேன், நம்மவர்களின் விளையாட்டுத் திறமையைப் பற்றி! நம்மிடம் போட்டி போடும் யோக்கியதை கூட ஒரு நாட்டிற்கும் கிடையாது!

ஏரல். அ. நந்தகுமார்.

* ஜப்பான் போன்ற நாடுகளிலெல்லாம் ஞாயிறு போன்ற விடுமுறை தினங்களில் மக்கள் தாங்களாகவே முன்வந்து வாகனங்களைப் பயன்படுத்துவதில்லை. காரணம் தேசபக்தி, தேசநலம். அந்த உணர்வு நமக்கு வரவேண்டும் எனக் கூறியுள்ளீர்கள். இது முற்றிலும் உண்மையே! எதற்கெடுத்தாலும் அயல்நாட்டு மோகம் கொண்டு திரியும் நம் மக்கள் இதுபோன்ற நல்ல காரியங்களில் அயல்நாட்டு மக்களைப் பின்பற்றினால் நாடும் வளரும், நாமும் வளர்வோம்.

திருச்சி — 17. எஸ். கே. பாரி.

* இன்னும் பத்தாண்டுகளில், உலக ஜிம்னாஸ்டிக் அரங்கில் நமது இந்திய வீராங்கனைகளையும் பார்க்கலாம், என்பதைப் படிக்கும் போது அளவிட முடியாத சந்தோஷம் ஏற்படுகிறது! அரசாங்க உதவியுடன் தான் 'இயங்கும் இக் கேந்திரம்' என நினைக்கும் போது வியப்பும் மேலிடுகிறது!

தோப்புத்துறை. கே. ஸ்ரீநிவாசன்.

* கருணாநிதி வெளியிட்ட ஒரு பழைய தகவலை அடிப்படையாக வைத்து, அவரை ஓகோ என்று பாராட்டுவதைப் போல எழுதிவிட்டு, சூட்டோடு சூடாக ஜெயேந்திரர் தெரிவித்த ஒரு கருத்தையும் செருகி, அவரை அமுக்க, அல்லது அவரை உங்கள் வலையில் சிக்க வைக்க முயற்சி செய்திருக்கிறீர்கள். கழுவற மீன்ல, நழுவற மீன் அவர், பாம்புக்குத் தலையும், மீனுக்கு வாலும் காட்டிவிட்டு நழுவிப் போய் விடுவார்! உங்கள் வார்த்தை ஜாலங்களுக் கெல்லாம் மயங்கி, மசிந்து விட மாட்டார்!

சிறுமுகை. ஜி. கதிரேசன்.

**'அம்மா வயிறு லங்கணம்; கும்பகோணத்தில் கோதானம்!'**

* "தங்கமும் வைரமும் தனித்தனியே இருந்தால் மதிப்புதான்! இருந்தாலும் தங்கத்திலே வைரத்தைப் பதிக்கும் பொழுது அதன் மதிப்பே தனிதான். கோவிலைப் பற்றிய கலைஞரின் கருத்துக்கள் தங்கம் என்றால், ஸ்ரீ ஜெயேந்திரரின் கருத்துக்கள் வைரம் போன்றவை! அதிலும் சுவாமிகளின் கருத்தைச் சொல்லி விட்டு, கலைஞரை வலியுறுத்தாமல் Gentle ஆகத் தலையங்கத்தை முடித்திருப்பது பாராட்டத்தக்க விஷயம்!!

ஆட்டையாம்பட்டி. தேன்மொழி சந்திரசேகரன்.

* ஆலயங்களுக்குச் சொந்தமான நிலங்களின் மூலம் வர வேண்டிய நியாயமான வருமானத்தை நில குத்தகையாளர்கள் கொடுப்பதில்லை. மனிதர்களுக்கு உள்ள 60/40 என்ற விகிதாசார வருமானம் கூட ஆலயங்களுக்குச் சரிவரக் கிடைப்பதில்லை. அரசு, குத்தகையாளர்கள் கடமையை உணர்த்தி, வருமானம் இன்றி ஒருவேளை பூஜைக்குக் கூட வழியின்றிக் கிடக்கும் கோயில்களின் வருமானத்தை ஓரளவு பெருக்க வழி செய்துவிட்டு, பின் உபரி வருமானச் செலவினம் பற்றிப் பேசினால், கொள்ளுக்கும் கடிவாளத்திற்கும் அரசு ஒன்றாகத்தான் வாய் திறக்கிறது என்று நினைக்கலாம். இதற்கு வழி செய்யாமல் அமைச்சர் கூறும் கருத்து 'அம்மா வயிறு லங்கணம்! கும்பகோணத்தில் கோதானம்!' என்பது போல உள்ளது.

சென்னை — 23. ஆர். இலகவதி.



* சகுனம் சரியில்லை...



* எப்படி வர்ணிப்பது?



* புரிந்து கொண்டிருக்கிறார்...

* **ஆர். அப்துல் சலாம், திருச்சி.**

? **ரத்து செய்யப்பட்ட ஏர் பஸ் — 320 ரக விமானங்கள் இன்னும் இரண்டு வாரத்தில் மீண்டும் செயல்படும் என்று மத்திய மந்திரி ஆரீஃப் முகமதுகான் தெரிவித்திருக்கிறாரே?**

! சகுனம்சரியில்லாமல்போயிற்றோ என்னவோ, அறிவிப்பு செய்ததுடன் கூடவே அமைச்சர் ராஜினாமாவும் செய்ய நேரிட்டது. அதனால் அவர் ஃபைலில் கையெழுத்துப் போட வில்லை — தாமதம். இப்போது மறுபடி அமைச்சராகி விட்டார். கையெழுத்தும் போடலாம். ஆனால் வேறு சிக்கல் தோன்றியுள்ளது. விமானங்களைப் பறக்கச் செய்வது என்ற முடிவு, இந்தியன் ஏர் லைன் ஸில் சம்பந்தப்பட்டவர்களைக் கலந்து ஆலோசிக்காமல் எடுத்த முடிவாகக் காணப்படுகிறது. ராமதாஸ் விசாரணைக் கமிட்டி அளித்த தீர்ப்பின் அடிப்படையில் இந்த ரக விமானப் பைலட்டுகளுக்குக் கூடுதல் பயிற்சி அளிக்க உத்தர விடப்பட்டுள்ளது. இந்தியன் ஏர் லைன்ஸ் உயர் அதிகாரிகளின் இந்த உத்தரவு, இன்னும் முழுமையாக நிறைவேற்றப்படவில்லை. அதற்கு முன்னதாக விமானங்களைச் செலுத்த அனுமதிப்பது உசிதமல்ல என்ற கருத்து நிலவுகிறது.

* **மு. தேன்மொழி கல்யாணசுந்தரம், மேட்டுப்பாளையம்.**

? **தமிழகத்தில் சிறந்த எதிர்க்கட்சி ஒன்று இல்லாமல் போய் விட்டதே?**

! அட, சர்தான் சார், ஏதோ சிறந்த ஆளும் கட்சி ஒன்று இருப்பது போலல்லவோ கேள்வி கேட்கிறீர்!

* **பி. முருகேசன், சிவகெங்கை.**

? **'விடுதலைப்புலிகளுக்கு இந்திய அரசு அங்கீகாரம் அளிக்க வேண்டும்' என்று நெடுமாறன் கூறியுள்ளது பற்றி...?**

! இதனை ஒப்புக் கொள்வதென்றால் முதலில் காஷ்மீர் விடுதலை முன்னணியினருக்கும் காலிஸ்தான் பிரிவினைவாதிகளுக்கும் அங்கீகாரம் அளித்து விட்டுத்தான் விடுதலைப் புலிகளிடம் மத்திய அரசு வர வேண்டியிருக்கும். இதைத்தான் நெடுமாறன் விரும்புகிறார் என்றால் அவரை என்னவென்று கூறி வர்ணிப்பது என்பதை நீங்களே முடிவு செய்து கொள்ளவும். எனக்குச் சொல்ல வருத்தமாக இருக்கிறது.

* **டி. பாரதி, அம்பத்தூர்.**

? **'கலைஞர், கம்பனுக்கும் ஒரு படி மேலே' என்று மானாவாரியாகப் புகழ்ந்திருக்கும் டாக்டர் எஸ். நல்ல பெருமாள், கம்பர் அளவுக்குக் கலைஞரை உயர்த்தியிருக்கிறாரா, அல்லது கலைஞர் அளவுக்குக் கம்பரைத் தாழ்த்தி இருக்கிறாரா?**

! கம்பனும் கலைஞரும் அவரவர் இடத்தில்தான் இருக்கிறார்கள். நல்லபெருமாள்தான் ஏகமாகத் தாழ்ந்து சறுக்கிக் கொண்டு போய் விழுந்து விட்டிருக்கிறார்.

* **என். ஆர். சுப்பிரமணியன், பூனாம்பாளையம்.**

? **தேசிய முன்னணி அரசு செத்துச் செத்துப் பிழைக்கிறதா?**

---

**நீங்கள் கேட்டவை — தராசு**

# ஜெயலலிதாவின்

! நித்திய கண்டம், பூர்ணாயுசு!

* **பி. கே. சங்கர், சென்னை — 20.**

? **சிறுபான்மை 'சமூகத்தினரை ஏளனம் செய்யும் விதத்தில் வாசகங்களைச் சுவர்களில் எழுதி வருகிறார்களே, இவர்களது செயல்களைத் தடுக்கத் தமிழக அரசு ஏன் தயங்குகிறது?**

! 'இதனைப் பெரிதுபடுத்தினால் தேவையற்ற பெரும் பிரச்னையாகும் என்பதற்காக நான் கண்டுகொள்ளாமலிருந்து விடுவது போல் ஒரு நாடகமாடி விடுகிறேன். நீ உன் பாட்டுக்கு உன் கை வரிசையைக் காட்டு' என்ற, எழுதப்படாத ஓர் உடன்படிக்கையாக இருக்கலாம்.

* **அ. க. கிருட்டிணன், வியாசர் நகர்.**

? **'இனி அரசாங்க முத்திரையில் வள்ளுவர் கோட்டம் சின்னம் இடம் பெறும்' என்று முதல்வர் கூறியுள்ளாரே?**

! வள்ளுவர் கோட்டமும் திருவா

# நடவடிக்கை சரியானதுதானா?

ரூர் தேரின் அடிப்படையில் உருவா னதுதான். அதிலும் இறையுணர்வு உண்டு. திருக்குறளிலும் உண்டு. வாய்மை என்பதிலும் தெய்வீகம் உண்டு. எனவே வள்ளுவர் கோட் டம் சின்னமாவதில் ஆட்சேபிக்க ஏதுமில்லை என்றாலும், தேவை யற்ற மாறுதல்கள் பலவற்றில் ஒன்று என்பதில் ஐயமில்லை. கருணாநிதி இன்னும் கொஞ்சம் நெஞ்சு நிமிர நிற்கலாம், ஆனால் அரசுச் சின்னத் தின் கம்பீரம் நிச்சயம் குறையும்.

* ஏ. எஸ். முத்து, த. அய்யன் கோட்டை.

**? சாத்தூரார், திருநாவுக்கரசு, ராம ராஜன் உள்படப் பலரைக் கட்சியிலி ருந்து நீக்கிய ஜெயலலிதாவின் நடவடிக்கை சரியானது என்று கருது கிறீர்களா?**

! அ. தி. மு. க. வில் இன்று உள்ள பெரிய குறை, தலைவருக்கும் தளபதி களுக்கும் இடையே கருத்துப் பரிமாற்றம் இல்லாததுதான். இந்த **Communication gap** சீரானால் எல்லாம் சரியாகிப் போய் விடும். இதற்கு 'ஜெ'தான் ஆவன செய்ய வேண் டும். செய்யாத வரை சீரழிவுதான்.

* கி. ராஜகோபால், விருகம்பாக் கம். *

**? மலிவு விலைச் சாராயக் கடை களை ஏலம்போட்டதில் கிட்டத்தட்ட முந்நூறு கடைகள் வரை ஏலம் எடுக்க எவரும் முன்வரவில்லை என்ற செய்தி உங்களை எப்படிப் பாதித்தது?**

! இந்தக் கடைகளும் ஏலம் போகும் அளவுக்கு அடிமட்ட ஏலத் தொகையைத் தமிழக அரசு குறைக் கத்தானே போகிறது என்பதால் வேதனைக்கு மேல் வேதனை ஏற் பட்டது.

* கே. மகேஷ், சங்கராபுரம்.

**? தி. மு. க. தீர்மானித்த முழு அடைப்புக்கு அ. தி. மு. க. மற்றும் காங்கிரஸ், எதிர்ப்புத் தெரிவிக்காத தைப் பெருந்தன்மை எனலாமா?**

! இலங்கைத் தமிழரின் துயரில் நாம் பங்கேற்பதைக் காட்டிக் கொள்ள, ஆட்சியில் உள்ள கருணா நிதிக்கு, பந்த் தவிர வேறு வழி யில்லை. அதற்கு ஆதரவு தராவிட் டால், இலங்கைத் தமிழர் துயரில் தங்களுக்கு அக்கறை இல்லை என்ப தாகி விடும் என்பதால், ஆதரிப்பது தவிர எதிர்க் கட்சிகளுக்கு வேறு வழியில்லை.

* ஜி. கதிரேசன், சிறுமுகை.

**? விலைவாசி உயர்வைக் கண்டித் துக் கிளர்ச்சி நடத்துமாறு காங்கிரஸ் தொண்டர்களை ராஜீவ் கேட்டுக் கொண்டிருக்கிறாரே?**

! மக்களை உசுப்பி விட எந்த அம்சம் உதவக்கூடும் என்பதைப் புரிந்து கொண்டிருக்கிறார். ஆனால் அவருடைய தொண்டர்களுக்குச் சுறுசுறுப்புப் போதாது. சோம்பலுக் குப் பழகி விட்டார்கள்.

* வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி, சென்னை — 17.

**? வி. பி. சிங்கின் அதிர்ச்சி நட வடிக்கைக்கும் ஜெயலலிதாவின் அதிரடி நடவடிக்கைக்கும் என்ன வித்தியாசம்?**

! ஜெயலலிதாவின் துணிச்சல் வி. பி. சிங்குக்குக் கொஞ்சம் இருந்து, வி.பி.சிங்கின் நிதானம் ஜெயலலிதா வுக்குக் கொஞ்சம் இருந்து விட்டால் இரண்டு பேருமே கொடி கட்டிப் பறப்பார்கள்!

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

கி. ராஜகோபால்,
14, வேங்கடேச நகர்,
விருகம்பாக்கம்,
சென்னை — 600 092.



* அதிர்ச்சி...



* அதிரடி...



* வேறு வழியில்லை!

# சீராகச் சரியும் தரம்!



**சு**மார் பதினைந்து நாட்களுக்கு முன்னர் இடம் பெற்ற 'எதிரொலி' நிகழ்ச்சி... முக்கியத்துவம் கொடுத்து ஒரு கடிதத்தைப் படித்தார்கள்.

பொதுவாக நேயர்கள் யாரும் கவனிக்காத ஓர் அறிவிப்பில் காணப்பட்ட தவறைப் போய் ஒரு நேயர் கண்கொத்திப் பாம்பாய்க் கவனித்துக் கடிதம் எழுதப் போக, அதை ஏனோ ஒதுக்கித் தள்ளி விடாமல் முன்னுரிமை கொடுத்துப் படித்தார்கள். 'தவறு' என்பதை ஒப்புக் கொண்டார்கள். சுட்டிக் காட்டியதற்கு நன்றி தெரிவித்தார்கள்.

நேயர்கள் பார்த்த அந்த அறிவிப்பு ஒரு 'ஸ்லைடு' என்றும், அந்தத் தவறு திருத்தப்பட்ட பின்னரே அது திரும்ப இடம் பெறும் என்றும் தெரிவித்தார்கள்.

'மண்டல ஒளிபரப்பு மீண்டும் நாளை' என்பதைத் தெரிவிக்கும் ஆங்கில 'ஸ்லைடு' அது. அதில், 'நாளை' என்பதைக் குறிப்பிடும் ஆங்கிலச் சொல்லைத் தேவையில்லாமல் ஒரு 'ஹைபன்' போட்டு to-morrow என்று பிரித்திருந்த தவறைத்தான் சுட்டிக் காட்டியிருந்தார் அந்த நேயர்.

ஆனால், இந்த விமரிசனம் எழுதுவதற்கு முன்தினம் இரவு வரை அந்தப் பழைய 'ஸ்லைடு'தான் தொடர்ந்து தினமும், திருத்தப்படாமல் இடம் பெற்று வந்திருக்கிறது!

**தே**சிய நிகழ்ச்சிகளில் பார்த்த மூன்று தொடர்களைப் பற்றிக் குறிப்பிட வேண்டும்.

ஒன்று — அண்மையில் முடிவு பெற்ற 'குணிராம்.' விளம்பரதாரர்கள் வழங்கும் தொடர்களின் தரம் ஒரே சீராகச் சரிந்து வருகிறது என்பதற்கு இது சான்று. "அப்பாடா, முடிந்து விட்டது" என்று சந்தோஷிக்கச் செய்தது.

இரண்டாவது — 'மாமாஜி.' முன் கூறிய படித் தரம் குறைந்து வருவதற்கு இன்னோர் உதாரணம். நகைச் சுவை என்கிற பெயரில் இடம் பெறும் அறுவை.

மூன்றாவது — 'யுகாந்தர்.' வங்காளி நாவலாம். கதா பாத்திரங்களுக்குப் பொருத்தம் இல்லாத நடிகர்கள். இன்றைய நடைமுறைக்கு ஏற்பில்லாத நிகழ்ச்சிகள்



• சுதாராணி ரகுபதி: பரவசமான படைப்பு.

**கி**ருஷ்ணமணியின் 'ஆசைகள்' நாடகம் மனத்தைத் தொட்டது — மறு ஒளிபரப்பாக இருந்தும்கூட. குறிப்பிட வேண்டியவை: அந்த வக்கீலின் பாத்திரப் படைப்பு, அது சொல்லும் செய்தி, அதனை ஏற்று மெருகூட்டிய சீனுவாசனின் நடிப்பு. முடிவைத்தான் ஒப்புக் கொள்ள இயலவில்லை.

**தே**சிய ஒளிபரப்பில் இடம் பெறும் 'பரதாஞ்சலி'யை அளிக்கும் சுதாராணி ரகுபதியின் உச்சரிப்பு சுத்தம். எளிமையான ஆங்கிலம். கேட்பவர் புரிந்து கொள்ள வேண்டும் என்பதில் கொண்டிருக்கும் கவனமும் அக்கறையும் நிகழ்ச்சி முழுதும்.

விளக்கமளிப்பதைச் செய்து காட்ட வெவ்வேறு பெண்கள் வெவ்வேறு உடை ரகங்களில், ரம்யமாக இருந்தது. ரசிகர்கள் மட்டுமின்றிப் பரத நாட்டியம் பயிலுகிறவர்களும் பார்த்துப் பயனடையலாம்.'

— **கிச்சாமி**


பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: ஒ. ராஜேந்திரன்.

முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.

ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.



# என் பாட்டி ஒரே ஒரு முறைதான் பொய் சொன்னாள்...

தினமும் நான் சாப்பாட்டை முடிக்க பாட்டி எனக்கு ஸ்பூன் நிறைய ஊறுகாய் வைப்பது வழக்கம். ஆகா, காரமும் மணமும் நிறைந்த, அருமையான, வீட்டிலேயே தயாரான ஊறுகாய்... ஆனால் நான் ருசித்துச் சாப்பிட்டது உண்மையில் ருசி ஊறுகாய்தான் என்பதை, பாட்டி என்னிடம் சொல்லாமலே மறைத்து விட்டாள். இப்போதுதான் எனக்கு அந்த உண்மை தெரியும். ஆனால் ஒன்று மட்டும் சொல்வேன். ருசி ஊறுகாய்க்கும் வீட்டிலேயே தயாரிக்கப்படும் ஊறுகாய்க்கும் வித்தியாசமே கண்டுபிடிக்க முடியாது. ஏனெனில் பாட்டியின் தயாரிப்பான வீட்டு ஊறுகாய் போலவே ருசி ஊறுகாய் விறுவிறுப்பானது. நல்ல மணத்துடன் கூடியது. மேலும் மேலும் சுவைக்கத் தூண்டுவது. இது முழுக்க முழுக்க உண்மைதான்!

சுவை மிக்க
19 வகைகளில்
கிடைக்கிறது.

Ruchi

ருசி ஃபுட் பிராடக்ஸ்,
"ஷ்யாம் ஹவுஸ்",
125, ஜி.என். செட்டி ரோடு சென்னை 600 017

போன் : 869290/869438




SHYAM GROUP
ENTREPRENEURS WITH VISION

LINTAS M RFP 3 2013 TM

**வீட்டிலே தயாரித்தது போன்ற சுவை.**
**செய்யும் சிரமம் சிறிதும் இல்லை**

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka

